செங்கல்பட்டு மாவட்டத்தில் கல்கி – I

# கல்கி

KALKI 20.9.87 ரூ. 2.



## அழகான ஊர்கள்; அவலமான வாழ்க்கை!

## வெள்ள நிவாரணத்தில் நடந்த கொள்ளை!

ஆம்ப்ரோ மில்க் பேஸ்

# ஸ்கூல் குழந்தைகளின் பிஸ்கெட்



ampro Milk Base

பாலில் உள்ள எல்லா ஊட்டச்சத்துக்களும் அடங்கியது.

# வெள்ள நிவாரணத்தில் நடந்த கொள்ளை!



கோட்டைசாமி

'**யா**னை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்' என்பார்கள். அது மாதிரி, அரசாங்கம் விழா எடுத்தாலும் கொள்ளைதான்; வெள்ள நிவாரணம் கொடுத்தாலும் கொள்ளைதான்! உதாரணத்திற்குச் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள மதுராந்தகம் தாலுகாவிலிருக்கும் ஆலப்பாக்கம் கிராமத்தை எடுத்துக் கொள்ளலாம்.

எப்போதோ நடந்த வெள்ளப் பெருக்கில் ஆடு, மாடு, கோழிகள்... என்று தங்கள்



பவானுதாஸ்



சுப்பராயலு

உடைமைகளைப் பறிகொடுத்து விட்ட இக்கிராமத்தைச் சேர்ந்த எண்பத்து நான்கு பேருக்குக் கடந்த 21.5.87 இல் வெள்ள நிவாரண நிதி கொடுக்கப்பட்டது. நல்ல விஷயம்தான்! ஆனால், அதில் ஒருவருக்கும் முழுமையான தொகை கொடுக்கப்படவில்லை. வெள்ள நிவாரணத் தொகையை வழங்கிய உள்ளூர் அ.தி.மு.க. பிரமுகர்கள் தங்களிஷ்டத்திற்குக் கொள்ளையடித்துவிட்டார்கள் என்பதுதான் குற்றச்சாட்டே!



எல்லம்மாள்

ஆலப்பாக்கம் கிராமத்திலுள்ள ஏ. எம். ராமச்சந்திரன் என்பவரைச் சந்தித்த போது, வெள்ள நிவாரணத் தொகையாக யார் யாருக்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டது என்ற பட்டியலையே காண்பித்து விளக்க ஆரம்பித்தார்.



முத்தன்

''பார்த்தீர்களா...? இந்தப் பட்டியலிலுள்ள மொத்தம் இருபத்தைந்து பேரும் வெள்ள

இந்தப் பட்டியலில் உள்ள இருபத்தைந்து பேருக்கும் ஒதுக்கப்பட்ட வெள்ள நிவாரண நிதி கொடுக்கப்படவே இல்லை. இவர்களுக்குப் பதில், வழங்கியவர்களே போலிக் கையெழுத்திட்டு எடுத்துக்கொண்டுவிட்டதாகப் புகார். இந்தப் பட்டியலில் உள்ள கையெழுத்துக்கள் தான் நிஜமானவை. ஊரில் இல்லாத நபர்களுக்கு எதிரில் இங்கு 'போலி நபர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

நிவாரணத் தொகையை இதுவரை வாங்கவே இல்லை. ஆனால் இவர்கள் வாங்கியதாகக் கணக்குக் காட்டப்பட்டிருக்கிறது. ஆம்; இவர்களுடைய கையெழுத்தை, வெள்ள நிவாரணத் தொகை வழங்கிய உள்ளூர் அ. தி. மு. க. பிரமுகர்களே போட்டு, பணத்தையும் அவர்களே எடுத்துக் கொண்டு விட்டார்கள்! இதில் இன்னொரு விஷயம் என்னவென்றால், இந்த இருபத்தைந்து பேரில், சண்முகம், இ. ஆறுமுகம், மு. ஆறுமுகம், குப்பன், க. ஆறுமுகம், பெருமாள், கோவிந்தன், சுப்பராயன் ஆகிய எட்டுப் பேரும் இந்த ஊர்க்காரர்களே இல்லை. அதாவது போலி நபர்கள்! அவர்கள் பெயரிலும் இவர்களே போலிக் கையெழுத்திட்டிருக்கிறார்கள்......

"அப்புறம் இந்த இரண்டாவது பட்டியலைப் பாருங்கள்... இதிலுள்ள ஐம்பத்தொன்பது பேருக்கும் தலா ஐநூறு ரூபாய்தான் வெள்ள நிவாரணத் தொகையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், ஒதுக்கப்பட்டுள்ள தொகைகளைப் பாருங்கள்.... குறைந்த பட்சம் அறுநூற்றுத் தொண்ணூற்று இரண்டிலிருந்து அதிகபட்சம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்று வரை ஒதுக்கப்பட்டுள்ளது! மீதித் தொகை என்னவானது? எல்லாம் உள்ளூர் அ. தி. மு.க. பிரமுகர்களின் வாய்க்குள்தான்!

"இந்த ஐம்பத்தொன்பது பேரிடமும்கையெழுத்து வாங்கிய போது, ஒதுக்கப்பட்டுள்ள தொகைகளை அவர்கள் பார்த்துவிடக் கூடாதே என்பதற்காக அவற்றை மறைத்து விட்டார்கள். இவர்களும் நமக்குத் தெரிந்த உள்ளூர்க்காரர்களே ஏமாற்றுவார்களா என்ற நம்பிக்கையில் சொன்ன இடத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டுக் கொடுத்த ஐந்நூறு ரூபாயை வாங்கிக் கொண்டு வந்துவிட்டார்கள்.

"இதெல்லாம் எங்களுக்குப் பின்னால்தான் தெரிய வந்தது. எப்போது என்றால், இந்த ஐம்பத்தொன்பது பேரைப் போலவே பாதிக்கப்பட்ட இன்னும் இருபத்தைந்து பேருக்கு ஏன் வரவில்லை என்று எங்கள் சேர்மன் நாராயண ரெட்டி (தி. மு. க.) யைக் கேட்ட போது! அவரிடம்கேட்டதும்,' அவர்களுக்கும் கொடுக்கப்பட்டு விட்டதே, அவர்கள் இன்னுமா வாங்கிக் கொள்ளவில்லை?' என்று ஆச்சரியத்தோடு திருப்பிக் கேட்டார். 'இல்லையே?' என்று நாங்கள் சொன்ன போது தான் இந்தப் பட்டியல்களை எடுத்துக் கொடுத்தார்.

"இந்நிலையில் நாங்கள் செய்ய முடியும்? இந்த இருபத்தைந்து பேரும் பணமே வாங்காதபோதும், இவர்கள் பெயரில்போலிக்

கையெழுத்துப் போட்டுச் சுருட்டப்பட்டிருக்கிறது என்பதை அறிந்ததும், இவர்களுடைய உண்மையான கையெழுத்துக்களை வாங்கி, 'இந்தக் கையெழுத்துக்களையும் ரெக்கார்டில் உள்ள கையெழுத்துக்களையும் சரி பாருங்கள். நிச்சயம் ரெக்கார்டில் உள்ள இந்த இருபத்தைந்து பேரின் கையெழுத்துக்களுக்கும் இவற்றுக்கும் வித்தியாசம் இருக்கும். அதன் பிறகு சம்பந்தப்பட்டவர்கள் மீது நடவடிக்கை எடுங்கள்...' என்று முதல்வர், கலெக்டர் என்று அனைவருக்கும் புகார் மனு அனுப்பினோம். அப்படியிருந்தும் இதுவரை எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இதேபோல்தான் பக்கத்திலுள்ள வெப்பலை என்னும் கிராமத்திலும் சுமார் ஐம்பதினாயிரம் ரூபாய் வரை கொள்ளையடிக்கப்பட்டிருக்கிறது. நான் சொல்லுவதில் உங்களுக்கு நம்பிக்கை இல்லை என்றால் சம்பந்தப்பட்டவர்களையே அழைத்து வருகிறேன். நீங்களே விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள்...'' என்ற ராமச்சந்திரன் பலரையும் அழைத்து வந்தார்.

''எனக்கு ஆயிரத்து நானூற்றுத் தொண்ணூற்று ஒரு ரூபாய் வெள்ள நிவாரணத் தொகையாக ஒதுக்கப்பட்டிருக்கிறதென்று சேர்மன் கொடுத்த பட்டியலில் இருக்கிறது. ஆனால் நான் ஒரு பைசாக் கூட வாங்கவில்லை...'' என்றார் எல்லம்மாள் என்ற பெண்மணி.

''எனக்கும் அப்படித்தான். ஆயிரத்து முந்நூற்று எழுபது ரூபாய் என்று பட்டியலில் உள்ளது. ஆயினும் நான் ஒரு பைசாக் கூட வாங்கவில்லை...'' என்றார் ரங்கநாதன் என்பவர்.

''எனக்கு ஐந்நூறு ரூபாய்தான் கொடுத்தார்கள் சார். சேர்மன் கொடுத்த பட்டியலைப் பார்த்த பிறகுதான், நான் தொள்ளாயிரத்து முப்பத்திரண்டு ரூபாய் வாங்கியதாகக் கையெழுத்து வாங்கியிருக்கிறார்கள் என்பது தெரிந்தது...'' என்றார் முத்தன் என்பவர்.

இவர்களைப் போலவேதான் சுப்பராயலு, கோட்டைசாமி, பவானுதாஸ் என்று பலரும் புகார் சொன்னார்கள் நம்மிடம். ஆக, நிலைமை இப்படியொரு கொள்ளையை வெளிப்படையாக உணர்த்தும் நிலையிலும், புகார் மனுவைப் பெற்றுக் கொண்ட முதலமைச்சர் அலுவலகத்திலிருந்து நடவடிக்கை எடுக்க முன்வராதது ஏன்? எல்லாம் பரிசுத்தமாகவே வழங்கப்பட்டிருக்கிறது என்றால், ரெகார்டில் உள்ள அந்த இருபத்தைந்து பேரின் கையெழுத்துக்களோடு மறுபடியும் அவர்களிடம் கையெழுத்துக்களை வாங்கி ஒப்பிட்டு நிரூபிக்கலாமே! அதில் என்ன தயக்கம்? அதோடு, அரசாங்கம் வழங்கும் வெள்ள நிவாரணத் தொகையை அரசாங்க அலுவலர்கள் வழங்காமல் உள்ளூரிலுள்ள ஆளுங்கட்சிப் பிரமுகர்கள் வழங்க வேண்டிய அவசியமென்ன? மேலும் இன்னும் எத்தனை எத்தனை இடங்களில் இப்படி நடந்திருக்கின்றதோ!

— இளங்கோவன்

# ஜல்லிக்கட்டு



சிவாஜி கணேசன் நீதிபதியாகப் போகும் ஜட்ஜ். செய்யாத கொலைக் குற்றம் — ஆனால் சட்டத்தை மௌனமாக்கும் சந்தர்ப்ப சாட்சியங்கள் — ஒன்றிற்காக ஆயுள் தண்டனை விதிக்கப்பட்ட சத்யராஜைத் தம் பராமரிப்பில் தம் பிரத்யேகத் தீவிற்கு அழைத்துப் போக — அவ்வளவாகப் புத்திசாலித்தனமில்லாத வழிமுறைகளில் சத்யராஜ் தப்பிக்கச் செய்யும் முயற்சிகள் இந்திய ராக்கெட்டுகளைப் போல் புஸ் புஸ் ஆகிவிட — சில காமா சோமா காரணங்களால் — சிவாஜி, சத்யராஜ் இருவரும் 'நேற்று ராஜா, ஒன்றானோம் இன்று' டூயட் பாடும் அளவிற்கு நெருக்கமாகிவிட...

வில்லன்கள் மூன்று பேர். மலேசியா வாசுதேவன், நம்பியார், சித்ரா லட்சுமணன். நிஜமாகவே வாசுவை ரேஸ்கோர்ஸில் ஓடும் குதிரைகளைப் பின்னணியாக வைத்து — ஷ்க். இண்டஸ்ட்ரியலிஸ்ட் நம்பியை (நம்பியாரைச் செல்லமாகக் கூப்பிடக் கூடாதா?) பங்க நூலாலும், கட்டுடா மிஷின்களின் இரைச்சலில் ரத்தம் கொட்ட விட்டு, ஜூனியர் லட்சுவை ஒரு ட. வி. பேட்டியின் நட்ட நடுவில் டூமீல் செய்து — வித்தியாசமான பழிவாங்கல்கள் என்று வைத்துக் கொண்டாலும், ஒரு நீதியரசரின் நேர்மையை நம்பி அனுப்பியவர்களின் நம்பிக்கையை ஜட்ஜே தவிடு பொடியாக்குவது அப்படி ஒன்றும் மூளையைக் கசக்கிக் கொண்ட ஐடியாவாகத் தோன்றவில்லை.

சிவாஜி டக்கர் காஸ்ட்யூம்களில் (லாங் ஷாட்கள் ரொம்ப ஆறுதல்) ஜிலுஜிலுவென்று வந்து போகிறார். வியட்நாம் வீடு சுந்தரத்தின் பேனா செய்ய வேண்டிய வேலை செய்திருக்கிறது. இளையராஜா வழக்கமான ட்யூன்கள்.

ஸாரி, சொல்ல மறந்து விட்டோம். ராதா கூட படத்தில் இருக்கிறார்.

— ஜெயமன்மதன்



• தழுதாளிக் குப்பம்: துவக்கப் பள்ளியின் வகுப்பறை

# அழகான ஊர்கள்; அவலமான வாழ்க்கை!

**பா**ரதியாரின் வரிகளான 'காணி நிலம் வேண்டும்... பத்துப் பன்னிரண்டு தென்னை மரம் பக்கத்திலே வேண்டும்...' என்ற வரிகளுக்கான நிஜத்தைக் காண வேண்டுமென்றால், நீங்கள் கேரளாவுக்குப் போக வேண்டியதில்லை. இடைக்கழி நாட்டுக்குச் செல்லுங்கள்.

ஒன்று அல்லது ஒன்றரை ஏக்கர் நிலம். நடுவில் ஒரு குடிசை. சுற்றிலும் மா, தென்னை, பலா, வாழை, முந்திரி மரங்கள். தெருவிலிருந்து பார்த்தால் வீடு இருப்பதே தெரியாத அழகிய சூழ்நிலை. ஊரிலுள்ள ஒவ்வொரு வீடும் இப்படித்தான் என்றால் அழகுக்குக் கேட்பானேன்! ஆனால் வாழ்க்கைதான் அவலம்!

செங்கல்பட்டு மாவட்டத்தின் தென் கோடியில், தென்னாற்காடு மாவட்டத்தின் எல்லைக் கருகில் அமைந்திருப்பதுதான் இந்த இடைக்கழி நாடு. இரண்டு பக்கங்கள் பக்கிங்காம் கால்வாயாலும், ஒரு பக்கம் உப்பங்கழியாலும், இன்னொரு பக்கம் கடலாலும் சூழப்பட்ட இந்த இடைக்கழி நாடு என்பது மொத்தம் இருபத்து நான்கரைக் கிராமங்களைக் கொண்டது. அது என்ன அரை கிராமம்? பள்ளம்பாக்கம் என்ற இடம் ஊராகவும் இல்லாமல் சிறு பகுதியாகவும் இல்லாமல் வெறும் பத்துக் குடிசைகளைக் கொண்டிருப்பதால், அதை அரை கிராமம் என்கிறார்கள்.

இடைக்கழி நாட்டை இரண்டாகப் பிரித்துச் செல்வது குண்டும் குழியுமான கிழக்குக் கடற்கரைச் சாலை. கிட்டத்தட்ட பதினைந்து கி. மீ. நீளமும் நான்கு கி. மீ. அகலமும் கொண்ட இந்த நிலப்பகுதி மழைக் காலத்தில் ஒரு தீவு போலத்தான் காட்சியளிக்கும்.

கடலோரப் பகுதியிலுள்ள கிராமங்களோ எல்லாக் காலங்களிலும் அனாதையானவையே. அப்படிப்பட்ட கடலோரக் கிராமங்களில் ஒன்றான தழுதாளிக்குப்பம் என்ற கிராமத்திற்குச் சென்றோம்.

சுமார் ஒரு பர்லாங் நடந்து பக்கிங்காம் கால்வாயில் இறங்கி, மணலில் முட்டு வலிக்க,



* இயற்கை கொஞ்சும் இடைக்கழி நாடு



* இளஞ்செழியன்

நடந்து சென்றால் வருவது தழுதாளிக் குப்பம். (பாதை முழுவதும் மணல் என்பதால் மாட்டு வண்டி கூடப் போக முடியாத நிலை. அதனால் நடப்பதென்பது தவிர்க்க முடியாதது.) அதற்கு அருகில் வெட்டவெளி மணலில் மாட்டுக் கொட்டகையாய்க் காட்சியளிப்பது அப்பகுதி ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளி. இப்படிப் பட்ட ஒதுக்குப் புறமான பள்ளிகளுக்குச் சரியான முறையில் ஆசிரியர்கள் வர மாட்டார்கள் என்பதுதான் எங்கள் மாவட்டச் சுற்றுப் பயண அனுபவம். அதற்கு மாறாக, இந்தப் பள்ளியின் ஆசிரியர்களான வேல்முருகன், செல்வராஜ் ஆகிய இருவரும் பள்ளிக்கு வந்திருந்து எங்களை ஆச்சரியப்பட வைத்தது சந்தோஷமான விஷயம்!

எனினும் ஆசிரியர் வந்திருந்தால் மட்டும் போதுமா? அவர்கள் உட்காருவதற்குக் கூட அங்கு நாற்காலிகள் கிடையாது. இரண்டு ஆசிரியர்களுக்கும் சேர்த்து ஒரே நாற்காலி தான் என்பதால், ஷிப்ட் முறையில்தான் உட்கார்ந்து கொள்ள வேண்டும். மற்றபடி ஒருவர் எப்போதும் குழந்தைகளோடு தரையில் தான் உட்கார்ந்து கொள்ள வேண்டும். தரை என்றால் மணல். கூரை என்பது அந்தக் கிராமத்து மக்களே கட்டிக் கொடுத்த ஓலைக் கூரை. அதுவும் பரிதாபமாகச் சிதைந்து கொண்டிருக்கும் நிலை. சுற்றுச் சுவர் என்பதே கிடையாது. பள்ளிக்கே இந்த நிலை என்றால் சத்துணவுக் கூடத்தைப் பற்றிக் கேட்பானேன்?

இப்படி நல்லபடியாகக் கல்வி பெறுவதற்குத்தான் வழியில்லை என்பதல்ல; இடைக்கழி நாட்டு மக்களுக்கு நோய் வந்தாலும் சிகிச்சை பெறும் வசதியும் இல்லை என்பதுதான் மிகவும் பரிதாபம். சுமார் பதினைந்தாயிரம் மக்கள் தொகை கொண்ட இடைக்கழி நாட்டுக்குக் கடப்பாக்கம் என்னும் கிராமத்தில் ஒரு மருந்தகம் உண்டு. அதற்கு டாக்டரும் நர்ஸும் இருக்கிறார்கள்.

ஆனால், ''டாக்டர் தினமும் வந்தாலும், கொடுப்பதற்கு அங்கே மருந்தில்லை. இதை விட்டால் சுற்று வட்டாரத்தில் சுமார் இருபது கி. மீ. பரப்புக்கு வேறு மருத்துவமனையும் கிடையாது...'' என்கிறார், இடைக்கழி நாட்டிலுள்ள சேம்புலி புரத்தைச் சேர்ந்த இளைஞரான இளஞ்செழியன்!

''இங்கு முந்திரி மரங்கள் அதிகம். முந்திரிப் பழ வாசனையில் ஈர்க்கப்பட்டு கருவிழா என்ற



* கடப்பாக்கம்: மருந்தில்லாத மருந்தகம்

பாம்புகள் இங்கு அதிகம் இருக்கும். மிகக் கொடிய நஞ்சுள்ள இந்தப் பாம்புகள் கடித்துப் பலபேர் இறக்கின்றனர். காரணம், இங்குள்ள மருந்தகத்தில் மருந்துகள் ஏதும் இல்லாதது தான். மேலும் இது மணல்பாங்கான பகுதியாதலால் பூமியில் சுமார் பத்துப் பதினைந்து அடி ஆழத்திலேயே தண்ணீர் (தண்ணீர் என்றால் ஆற்றுத் தண்ணீர் மாதிரி அப்படியொரு சுவை!) கிடைக்கிறது. அதில் மோட்டார் வைத்துத் தண்ணீர் இறைக்கலாம் என்றால், மின்சார இணைப்புக்குக் குறைந்தது பத்து வருடங்களாவது காத்திருக்க வேண்டிய நிலை. இதோடு, கணிசமான அளவுக்கு இங்கே முந்திரி விளைவதால், முந்திரி வாரியமே வந்து கொள்முதல் செய்து, தனியார்களின் கொள்ளை லாபப் போக்கைத் தடுக்க வேண்டும்...'' என்ற இளஞ்செழியன், கடைசியில், ''இங்கு நல்ல முறையில் இயங்கி வரும் நூலகத்தையும் பஸ் வசதியையும் பாராட்டாமல் இருக்க முடியாது சார்'' என்றார்.

இத்தனை குறைகள் இருந்தாலும், அழகான இயற்கைச் சூழ்நிலைக்குக் கேரளா செல்ல வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருப்பவர்களுக்குச் சொல்கிறோம்; இடைக்கழி நாட்டுக்குச் செல்லுங்கள். அது ஒரு குட்டி கேரளா.

— **ப்ரியன்**

அட்டையில்: இயற்கை கொஞ்சும் இடைக்கழி நாடு. வண்ணப்படமும், செங்கல்பட்டு மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும்:

**கே. வி. ஆனந்த்**

**வம்பு மார்க்கெட்:**





# மூப்பனாருக்கு முதல் மரியாதை!

### ஏன் இல்லை?

பொதுவாகப் பெரியார் — அண்ணா பிறந்த தினங்களை செப்டம்பர் மாதம் சிறப்பாகக் கொண்டாடித் தத்தம் கட்சிகளுக்கு டானிக் தேடிக் கொள்வதில் எப்போதுமே 'தி. மு. க.', 'அ. தி. மு. க.' இரு கட்சிகளுமே தோள் தட்டி, உஷாராக இருக்கும்.

ஆனால் இந்த ஆண்டு, தி. மு. க. கொண்டாடிய அளவு அ. தி. மு. க. கொண்டாடவில்லை. ஏன்?

'வறட்சி' என்று வெளியே சொல்கிறார்கள்.

ஆனால் உண்மையில் உள்ளூரில் இருக்கும் தலைவர்கள் மத்தியில் இருக்க வேண்டிய ஒற்றுமைதான் வறட்சி. யார், எப்படிக் கொண்டாடுவது என்ற குழப்பம்தான். காலையிலும் மாலையிலும் அமெரிக்காவிலிருந்து அம்பாக அறிக்கைகளை விட்டுக் கொண்டிருக்கும் எம். ஜி. ஆரும் அதிகமாகக் கண்டுகொள்ளவில்லையே, ஏன்?

### திடீர்ச் செய்தி

எம். ஜி. ஆர்தான், சிகிச்சைக்காக அமெரிக்காவுக்குப் போயிருந்தார் என்று ஊரில் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு திடீர் மருத்துவச் செய்தியால் பத்திரிகையில் ஒரு நாள் பப்ளிசிடிக்கு உள்ளானவர் ஜானகி அம்மாள். அவருக்கு இதயத்தில் ஆபரேஷன் நடந்த செய்திதான் அது.

இதில் ஒரு விசேஷம் தெரியுமா? எம். ஜி. ஆர். குடும்பத்துக்கு மிக வேண்டிய 'பர்சனல்' நண்பர்கள் என்று சொல்லப்படும் கலோசனா சம்பத், ஆர். எம். வீ. போன்றவர்களுக்கே, இந்த ஆபரேஷன் திட்டம் முன்னதாகத் தெரியாதாம்! அவ்வளவு ரகசியமாக வைக்கப்பட்டிருந்ததாம்!

இன்னொரு கொசுறு தகவல் — இப்படி கணவர் சிகிச்சைக்காகப் போன இடத்தில் மனைவி ஆபரேஷன் செய்து கொண்டாரே என்று யாரும் சொல்லக் கூடாதே என்பதற்காக, 'ஏற்கெனவே எம். ஜி. ஆரின் உதவியாளர் பரமசிவம் இப்படி ஆபரேஷன் செய்து கொண்டார்' என்று ஞாபகப்படுத்தி 'இப்படியெல்லாம் செய்கிறது எங்கள் பழக்க வழக்கம்தான்' என்று விஷயத்தைச் சாதாரணப்படுத்தி விட்டார்கள்.

### மூப்பனாருக்கு ஏன் முதல் மரியாதை?

இ. காங்கிரஸ் மேலிடத்தில் நம்மூர் ஜி. கே. மூப்பனார் தவிர, மற்றவர்கள் அனைவரும் களையெடுப்புக்கு உள்ளாகியிருக்கிறார்கள்.

இந்த அளவு கட்சிக்குள் தன்னைப் பின்னிக் கொண்டிருப்பதில் மூப்பனார் வெற்றி பெற்றதற்கு மூப்பனாரேதான் ஒரு காரணம் என்கிறார்கள்.

இவர் மந்திரியாகவும் விரும்பவில்லை. (தன் 'மேஸ்திரி'த்தனத்தை மந்திரி பதவியில் காட்ட முடியாது. அதற்குக் கட்சிதான் லாயக்கு' என்று அவர் நினைக்கிறாராம்.)

இரண்டாவது தமிழக முதல்வராக அன்றி அவர் மாநில அரசியலுக்குத் திரும்ப விரும்பவில்லை. இதை ராஜீவ் காந்தியும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

### ஒரு ஜோசியம்

மத்திய அரசவையிலிருக்கும் நம்மூர் அண்ணாமலை மந்திரி அநேகமாகக் கட்சிப் பணிக்கு அனுப்பப்படுவாராம். ஒரு முறை ஃபைல் ஒன்றில் 'இவர் கட்சிப் பணிக்கு ஏற்றவர்' என்று ராஜீவ் காந்தியே அவரைப் பற்றி எழுதியிருக்கிறாராம்!

— ஒட்டக்கூத்தன் ஜி

# பரிட்சை நெருங்கிடும் காலம்? கவனமாக படித்திடும் நேரம்



முழுதும்
தயாராயிருந்திட
வேண்டிய காலம்
**காம்ப்ளான்®**
பருக வேண்டிய
நேரம்.

## காம்ப்ளான்® ஒன்றில்தான் அவனுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் 23 மூலாதார சத்துணவுகள் உள்ளன.

குழந்தைகள், முக்கியமாக பரிட்சைக்கு படிக்கும் காலத்தில், திடமாக இருந்திடுவது அவசியம். அதனால்தான் பரிட்சை நடக்கும் நேரம் காம்ப்ளான் நேரம் என்று அன்னையர் அறிவர்.

உடல் வளர்ச்சியில் பங்கு பெறுவதே புரதம் என்ற சத்துதான். காம்ப்ளானில் குழந்தைகளுக்குத் தேவையான புரதம் (20%) இருப்பது மட்டுமல்ல, அப்புரதம் மிகச்சிறந்த புரதமுமாகும் (பால் புரதம்). அத்துடன், அது குழந்தைகளுக்கு தேவையான அதி ஊட்டமளிக்கும் கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச்சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் ஆகிய 22 கூடுதல் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும்.

துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு—அன்றுடம் இருவேளை.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளாம் சாக்கலேட், ஏலக்காய்—குங்குமப்பூ, ஐஸ்க்ரீம், ஸ்ட்ராபெர்ரியும், சாதா ரகத்திலும்.

குழந்தைகள் மிகவும் விரும்பிடும் சுவைகள்.




**காம்ப்ளான்®** — திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/22/203 TML

அழகுக்கு அழகு செய்யும் பல வண்ணங்களில்
காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள், வாங்கச் சிறந்த கூட்டுறவு
சங்கம். முதன் முதலாகத் தமிழகத்தில் துவங்கப்பட்ட பட்டு கூட்டுறவு சங்கம்

துவக்கம்: 1942. தொலைபேசி: 2478

# காஞ்சிபுரம் பட்டு நெசவாளர்
# கூட்டுறவு உற்பத்தி மற்றும் விற்பனை சங்கம் லிட், எண்: ஜி. 1099

443, காந்தி ரோட்:: காஞ்சிபுரம் — 631 501.

கே. சந்திரன் தலைவர்

ரா. கிருஷ்ணசாமி முதலியார் உபதலைவர்

இயக்குநர்கள்:

மு. லோகநாதன்,
க. அண்ணாமலை,
க. லோகநாதன்,
எஸ். தயாளன்,
தி. குமரன்.

கிளைகள்:

1) 231 — 232, கிருஷ்ணா மார்க்கெட், பெங்களூர்.
2) 15 — 3 — 413, மெயின் பஜார், இந்துப்பூர்.
3) 257, 2 வது அக்ரஹாரம், கிருஷ்ணா காம்ப்ளக்ஸ், சேலம்.
4) 6, C.S.I. கட்டிடம், அசோகா ரோட், தும்கூர்.
5) 26/118, இராஜ வீதி (மாடியில்) கோயமுத்தூர்.
6) 12, கிருஷ்ண ராஜேந்திரா சர்க்கிள், (மாடியில்), மைசூர்
7) காஞ்சி கூட்டுறவு பட்டு (உம்மிடியார்ஸ்), சென்னை.
8) 139, கீழவெளி வீதி, மதுரை.
9) 15 — 132, சுபாஷ் ரோட், நியூ டவுன், அனந்தப்பூர்
10) 218, நேதாஜி ரோட், ஈரோடெக்ஸ், ஈரோடு.

A. செல்வராஜ் L.T.M.,
உதவி இயக்குநர்/செயலர்.



* வண்டலூர் உயிரியல் பூங்காவின் ஒரு பகுதி



* இரணியப்பன்



# உயிரியல் பூங்காவில் உயிர்களுக்கு மதிப்பில்லை!

**வ**ண்டலூர் உயிரியல் பூங்காவிலிருந்து ஒரு கடிதம் வந்தது. எழுதியது அங்குள்ள மிருகங்கள் இல்லை. (அவைகளுக்கு பிரச்னைகள் இல்லையோ அல்லது, தங்கள் பிரச்னையை எழுத்தில் வடிக்கக்கல்வியறிவு இல்லாதது காரணமோ தெரியவில்லை) எழுதியவர் உயிரியல் பூங்காத் தொழிலாளர் சங்கச் செயலாளர் சி. இரணியப்பன். அவரைச் சந்தித்தோம்.

''இந்த உயிரியல் பூங்காவில் உள்ள மிருகங்கள், பறவைகள் ஆகியவற்றுக்கு உணவிடுதல், அவற்றின் கூண்டுகளைச் சுத்தப்படுத்துதல், மற்றும் குடிநீர் விநியோகம் சம்பந்தமான வேலைகள் என்று பலவிதமான பராமரிப்புப் பணிகளையும் செய்ய 1979 ஆம் ஆண்டு வாக்கில் மொத்தம் 245 (125 ஆண்கள், 120 பெண்கள்) தொழிலாளர்கள் இருந்தனர். ஆனால் நிர்வாகமோ, இன்னும் இவர்களை நிரந்தரமாக்கவில்லை. அனைவரும் தினக்கூலிகள்தான். அதோடில்லாமல், நிர்வாகம் படிப்படியாக ஆட்குறைப்பு நடவடிக்கைகளிலும் ஈடுபட்டு இன்று 170 தொழிலாளர்கள்தான் வேலை செய்கிறார்கள். மேலும் நிர்வாகத்துக்குப் பழிவாங்கும் மனப்பான்மையும் இருக்கிறது. இதனால் வேலை போய், இன்று கஷ்டப்படும் தொழிலாளர்கள் நிறையவே உண்டு.

''உயிரியல் பூங்கா நிர்வாக அதிகாரிகள் தவிர, இப்பகுதி வனத்துறையின் கீழ் வருவதால் ரேஞ்சு அலுவலர்கள், ஃபாரஸ்டர்கள், கார்டுகள் ஆகியோர் தயவிலும், அவர்கள் விருப்பு, வெறுப்புகளுக்கு ஏற்றபடியும் வேலை செய்ய வேண்டிய நிலை. ரேஞ்சு அலுவலர்கள் தொழிலாளர்களின் கைகளைக் கட்டி வைத்து அடிப்பதும், பூட்ஸ் காலால் உதைப்பதும் அடிக்கடி நடக்கும். பெண் தொழிலாளிகளை 'வாடி.... போடி... நாயே...' என்றெல்லாம் அநாகரிகமாய்த் திட்டுவதும் இங்கு சகஜம். ஒரு பார்வையாளர், இந்த அநாகரிகச் செயலைப் பார்த்து விட்டுக் கோபமுற்று, தினப் பத்திரிகையில் ஒரு தடவை ஆசிரியருக்குக் கடிதம்கூட எழுதியிருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்

ளுங்களேன்!.

''இன்னேர் உதாரணம். இங்கே வேலை பார்த்த ஜான் என்கிற தொழிலாளியை ஃபாரஸ்டர், கார்டு, ரேஞ்சு ஆபீஸர் என்று எல்லோருமாய்ச் சேர்ந்து சொந்த வெறுப்பில் கைகளைக் கட்டி அடித்தனர். அவர் போலீஸில் புகார் கொடுக்க, பதிலுக்கு நிர்வாகம் ஜான் மீது பொய்க் கேஸ் போட்டு, வேலை கொடுப்பதை நிறுத்தியது. கோர்ட்டில் ஜானைக் குற்றமற்றவர் என்று விடுவித்தும், இன்னும் அவருக்கு நிர்வாகம் வேலை கொடுக்க முன்வரவில்லை.

''தொழிலாளர்களின் இப்படிப்பட்ட பிரச்னைகளுக்கு முடிவு கட்டத்தான் 30.9.85 இல் நாங்கள் சங்கம் அமைத்தோம். ஆனால் உயிரியல் பூங்கா நிர்வாகம், எங்கள் சங்கத்தை அங்கீகரிக்கவே இல்லை. எங்களின் கோரிக்கைகளை முன் வைத்துப் பேச்சு வார்த்தைக்கு அழைக்கச் சொன்ன போதும் பலனில்லை. எங்களுடைய கோரிக்கைகளில் முக்கியமானது பணி நிரந்தரம் செய்ய வேண்டும் என்பதுதான்.

''இந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் தீர்வு காண, 85 ஏப்ரலில் அப்போது வனத்துறை அமைச்சராயிருந்த ஆர். எம். வீரப்பனிடம் மனு கொடுத்தோம். அவர் ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. 86 ஜூனில் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்று, எம்.ஜி. ஆரிடம் முறையிடப் போனேம். எங்களை உள்ளே அனுமதிக்கவில்லை. எனவே, அவரது உதவியாளரிடம் மனுவைக் கொடுத்தோம். 'உரிய நடவடிக்கை எடுக்கப்படும்' என்றார். ஒன்றும் நடக்கவில்லை

''மறுபடியும் ஆர். எம். வீ. உயிரியல் பூங்காவில் நடந்த ஒரு விழாவுக்கு வந்த போது முறையிட்டோம்; பிரயோஜனமில்லை. எங்கள் தொகுதி (திருப்போரூர்) எம்.எல்.ஏ. தமிழ்மணி (அ. தி. மு. க.)யைச் சந்தித்து முறையிட்ட போது, 'நீங்கள் உங்கள் சங்கத்தை அ. தி. மு. க. தொழிற்சங்கமாய் மாற்றுங்கள். மூன்றே மாதத்தில் பிரச்னைகளைத் தீர்க்கிறேன். இல்லையெனில் உங்களுக்கு ஒன்றும் கிடைக்காது... என்று சொல்லி விட்டார். இன்னும் நாங்கள் யாரிடம்போய்ச் சொல்ல?'' என்று முடித்தார் இராணியப்பன்.

நிர்வாகத் தரப்பில் என்ன சொல்லுகிறார்கள்? அண்ணா உயிரியல் பூங்காவின் இயக்குனராகக் கூடுதல் பொறுப்பு வகிக்கும் அருள்பிரகாசத்தைச் சந்தித்துப் பேசினேம்.

''இந்த உயிரியல் பூங்கா வேலைகள் இன்னும் முழுமையடையவில்லை. இந்த பிராஜக்ட் 88 மார்ச்சில் முடிய வேண்டும். இப்போதைய நிலவரப்படி, 88 இறுதியில் முழுமையடையும் என்று நம்புகிறோம். அந்தச் சமயத்தில்தான் ஒவ்வொரு வகையான பணிக்கும் எத்தனை பேர் தேவைப்படுவார்கள் என்று கணக்கெடுத்துத் தொழிலாளர்களை நிரந்தர நியமனம் செய்ய முடியும். அதுவரை தினசரி கூலிகளைத்தான் வேலைக்கு வைத்துக் கொள்ள முடியும். 88 இறுதியில்தான் இந்தப் பிரச்னை தீரும்.

''மேலும், இங்கே அவ்வப்போது, வேலைப் பளுவுக்கேற்பத்தான் ஆட்களை வேலைக்கு வைத்துக் கொள்வது வழக்கம். இதில் சங்க நிர்வாகிகளையோ, மற்றவர்களையோ, பழி வாங்கும் விதமான செயல் எதுவும் நடக்கவில்லை. ஜான் என்கிற ஊழியர் விஷயத்தைப் பரிசீலித்து ஆவன செய்கிறேன். அதிகாரிகள், ஊழியர்களைத் தரக் குறைவாய் ஏசுவது பற்றியும் நான் கவனிக்கிறேன்; உரிய எச்சரிக்கை செய்கிறேன்'' என்றவரிடம், பூங்காவுக்கு வரும் பார்வையாளர்கள் தாங்கள் காணும் குறைகள் மற்றும் ஆலோசனைகளை எழுத, ஒரு புகார்ப் புத்தகம் வைப்பது அவசியம் என்று நாம் சொன்ன ஆலோசனையையும் ஏற்றுக் கொண்டு உடனடியாய்ப் புகார் மற்றும் ஆலோசனைப் புத்தகம் வைக்க ஏற்பாடு செய்வதாய்ச் சொன்னார்.

— ஜூலி

## அடுத்த இதழ்...

செங்கல்பட்டு மாவட்டத்தில் கல்கி — II

* கு. க. திட்டத்தில் குளறுபடிகள்! — கவர் ஸ்டோரி

* ''இது மாதிரி கேள்விகளை நான் எதிர்பார்க்கவில்லை!'' — செங்கல்பட்டு மாவட்டக் கலெக்டர் பேட்டி!





# சிவசங்கரி

எழுதும்
நெஞ்சை
நெகிழச்
செய்யும்
நவீனத்
தொடர்
கதை



## வேரில்லாத மரங்கள்

# கல்கி

அக்டோபர் 18உ
தீபாவளி
சிறப்பிதழில்



ஆரம்பம்



# கல்கி

1987 செப்டம்பர் 20
மலர் 46 இதழ் 8
பிரபவ புரட்டாசி 4



## நாட்டில்தான் வறட்சி; ஆட்சித் திறனிலுமா?

நூறு மைல் வேகத்தில் ஜீப்பைத் தாமே ஓட்டிக் கொண்டுபோய், ஆந்திரப் பிரதேசத்தில் ஒரு புயல்வேகச் சுற்றுப் பயணம் செய்த பிரதமர், தமிழகத்தில் கன்னியா குமரிக் கடற்கரையில் சுண்டல் வாங்கித் தின்றுவிட்டு, ஒரு சூறாவளிச் சுற்றுப்பயணம் நடத்திவிட்டுத் தலைநகர் திரும்பி விட்டார்! இவருடன் வந்துபோக, கறுப்புப் பூனைப் படைகளுக்கும் இதர பல பாதுகாப்பு ஏற்பாடுகளுக்கும் ஆன செலவுகளைக் கணக்கிட்டால், அந்தப் பணத்தைக் கொண்டே பகுதியளவு வறட்சி நிவாரணப் பணிகளை நிறைவேற்றி விடலாம் என்று பேசுமளவுக்குச் செலவு! பிரதமரை மாநிலங்களுக்கு வறட்சி காண வரச் சொல்லும் முதல்வர்கள், தாங்கள் கேட்பதில் பகுதி அளவுதான் கிடைக்கும் என்பதால் கூடுதலாகக் கேட்பதும் பிறகு பிரதமர், பழங்கால ராஜா பாணியில் இத்தனை கோடி தருகிறேன் என்று அறிவிப்பதும் வழக்கமாகி வருகின்றன. இவையெல்லாம் மக்களிடையே பிராபல்யம் அடையவும் நாளை தேர்தலின்போது வோட்டுப் பெறவும் உதவலாம்; நாட்டின் பொருளாதாரத்துக்கு உதவாது. மக்களைக் கடைசியில் வாட்டி வதைக்கவே செய்யும்.

வறட்சியைச் சமாளிக்க ஏராளமாய்ச் செலவழிக்கும்போது, ராஜீவின் பட்ஜெட் எகிறிப் போகும். பற்றுக் குறை அதிகரிக்கும். விவசாய, தொழில் வளர்ச்சிக்கான பல திட்டங்கள் காகிதத்தில் எழுதப்பட்டதோடு நிற்கும். நமது நாடு விவசாய நாடு. வறட்சி காரணமாக விளைச்சல் பாதிக்கப்படும்போது மக்களின் வாங்கும் சக்தி குறையும். இதனால் தொழில் துறையில் உற்பத்தியான பண்டங்கள் விலை போகாமல் தேக்க நிலை ஏற்படும். தொழில் உற்பத்தியும் தொழில்களில் முதலீடும் குறையும். அந்நியச் செலாவணி நிலை கவலைக்கிடமாகும். இத்துடன் சமையல் எண்ணெய் இறக்குமதியும் கூடுதலாகி, அந்நியச் செலாவணி நிலை மேலும் பாதிப்புக்குள்ளாகும். போதாக்குறைக்கு, வறட்சி நிவாரணப் பணி என்று பல கோடிகளை அள்ளிவிட்டு விரயம் செய்யும்போது, பணவீக்கம் அதிகரிக்கும். இதனால் விலைவாசிகள் மேலும் உயரும். மக்கள்தான் அவதிப்படுவார்கள். ஏற்கெனவே பூஜாரி அருளுடன் நடந்த கடன் விழாக்களால் பணப்புழக்கம் அதிகரித்திருப்பது மட்டுமல்ல; 'கோஸ்ட் அகவுண்ட்ஸ்' எனப்படும் பினாமிக் கணக்குகள் எக்கச்சக்கமாக உயர, வங்கிகள் விழிக்கின்றன. வறட்சி காரணமாகக் கடன் வசூலும் நடக்காது!

எனவே, நாட்டில் வறட்சி இருந்தாலும் ஆட்சித் திறனில் வறட்சி இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது முன்னெப்போதையும் விட அவசியமாகிறது. ஆனால் நமது பிரதமரோ பச்சோந்தி மாதிரி நிறம் மாறி, இப்போது திடீரென்று சோஷலிஸம் பேசி, காங்கிரஸின் சோஷலிஸப் பிரிவைத் தட்டிக் கொடுக்கத் தொடங்கியிருக்கிறார்! முன்பு 'வி. பி. சிங்கின் பொருளாதாரக் கொள்கைகளுக்கும் அதனால் ஏற்பட்ட பொருளாதார முன்னேற்றத்துக்கும் பிரதமரே காரணம், வி. பி., சிங் அல்ல' என்று கூறிக் கொண்டிருந்தவர்களே இன்று, நிறம் மாறி, 'முன்பு நிலவிய வி. பி. சிங்கின் முதலாளித்துவக் கொள்கைகள் இனி மாறி, ராஜீவின் சோஷலிஸக் கொள்கைகள் அமுலாகும்' என்கிறார்கள்! இவையெல்லாம் பிரதமரின் உறுதியற்ற நெஞ்சையும் கொள்கைப் பிடிப்பின்றி வோட்டுக்காக நிறம் மாறும் போக்கையுமே உணர்த்துகின்றன.

வறட்சி நிவாரணம் வேண்டாம் என்று நாம் கூறவில்லை. ஆனால் அது கட்சிக் கண்ணோட்டத்துடன் ஆளும் கட்சி ஆட்கள் மூலம் நடக்கக் கூடாது. இதனால் ஊழலே பெருகும். மக்களைக் கையேந்த வைத்துப் பிச்சை போடுவது போல் எதையும் தரக் கூடாது. சாலை அமைத்தல், ஏரி — குளம் ஆழப்படுத்துதல், கரை எடுத்தல் போன்ற பணிகளைச் செய்த திருப்தியோடும் தன்மானத்தோடும் அவர்கள் கூலி பெற வேண்டும். பகுதிக் கூலியைத் தானியமாகவும் தரலாம். தேவையற்ற இறக்குமதிகளைக் குறைப்பதும் உள்நாட்டில் வறட்சி காரணமாக விலை போகாத பண்டங்களை ஏற்றுமதி செய்ய ஊக்கம் அளிப்பதும் அவசியம். அதிர்ஷ்டவசமாகப் பசுமைப் புரட்சி நடந்து, நமது தானியக் கையிருப்பு கணிசமாக இருப்பதால் பஞ்சம் — பட்டினிக்கு இடமில்லை. அவ்வாறு நேர்ந்தால், இயற்கை பொய்த்தது அல்ல; ஆட்சியாளரின் அலட்சியப் போக்கே அதற்குக் காரணமாகும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்

# சுவிஸ் வங்கியில் தராசுக்குக் கணக்கு உண்டாமே?



* என். சேதுராமன், குத்தாலம்.

**? கவிஸ் வங்கியில் தராசுக்கும் கணக்கு உள்ளதாக ஒரு வதந்தி உலவுகிறதே. உண்மையா?**

! என் பெயரிலோ அல்லது என் மனைவி. குழந்தைகள் மற்றும் உறவினர்கள் பெயரிலோ சுவிஸ் வங்கியில் எந்தவிதமான கணக்கும் இல்லவே இல்லை என்பதையும் அப்படியே இருந்தாலும் அதை நான் ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்பதையும் இந்த மக்கள் மன்றத்தில் வெளிப்படையாகச் சொல்லிக் கொள்கிறேன்.



• ஸ்டிக்கர்



• "சுற்றலாமா?"

* திருமலை கோவிந்தன், மதுரை — 1.

**? ஆந்திர முதல்வர் என். டி. ஆர். 'லஞ்சத்தை என்னால் ஒழிக்க முடியவில்லை. அதில் நான் தோல்வியடைந்து விட்டேன்' என்று கூறியிருப்பதன் மூலம் அவர் மக்களை முட்டாள்களாக்குகிறார் என்று நினைக்கிறேன். உங்கள் கருத்து?**

! என். டி. ஆர். அப்படிச் சொல்ல நேர்ந்ததற்கான சூழ்நிலையை முதலில் ஆராய வேண்டும். ஏழை மக்களுக்கு இலவசமாகத் துணிகள் வழங்க ஏற்பாடு செய்யப்படுகிறது. அந்தப் பொறுப்பு அதிகாரிகளிடமும் மற்ற ஊழியர்களிடமும் ஒப்படைக்கப்படுகிறது. அவர்களோ, துணிகளை வழங்காமலேயே வழங்கியதாகக் கணக்குக் காட்டுகிறார்கள். இது என். டி. ஆருக்குத் தெரிய வரும்போது, அரசு அதிகாரிகளும் ஊழியர்களுமே இப்படிச் செய்கிறார்களே என்று மனம் நொந்து போகிறார். அந்த நொந்த மனத்தின் வேதனையில்தான் அப்படிப் பேசியிருக்கிறார். இது எப்படி மக்களை முட்டாள்களாக்கும் முயற்சியாகும்?



பால்கே விருது



• "சுத்தியுடன் நடமாடு!"

* சி. செல்வராஜ், ஆரோவில்.

**? சமீபத்தில் இந்தியன் எக்ஸ்பிரஸ் அலுவலகங்களில் நடத்தப்பட்ட ரெய்டு பற்றி?**

! கோயங்கா மட்டும் சட்டத்திற்கு அப்பாற்பட்டவரல்லர் என்பதைச் சென்ற வாரமே சொல்லியிருந்தேன். அதே நேரத்தில் எக்ஸ்பிரஸ் அலுவலகங்களில் நடத்திய ரெய்டுக்கு அரசு சொன்ன காரணங்கள் அற்பமானவை என்றும் காண்கிறேன். அதற்கு ரெய்டு நடத்த வேண்டிய அவசியமே இல்லை. எழுதிக்கேட்டே அந்தத் தகவல்களைப் பெற்றிருக்க முடியும். ஆக, சமீபத்திய ரெய்டு பழிவாங்கும் படலமே என்றும் எக்ஸ்பிரஸ் பத்திரிகை, அரசின் பல ஊழல்களை அம்பலப்படுத்த உதவியவர்கள் யார் என்று துப்பறிய நடந்த முயற்சி என்றும் கருத இடமளிக்கிறது.

* கே. ஜி. எஃப் பழனிசாமி, பெங்களூர்.

? சென்னை நகரத்தில் வழங்கப்படும் இலவச பிளாஸ்டிக் குடங்களில் எம். ஜி. ஆர். படம் தாங்கிய 'ஸ்டிக்கர்'கள் ஒட்டப்பட்டிருப்பது குறித்து?

! தவறு. அரசாங்கப் பணத்தில் — அதாவது மக்களின் வரிப் பணத்தில் வழங்கப்படும் பிளாஸ்டிக் குடங்களில் இப்படி எம். ஜி. ஆர். என்ற தனிப்பட்டவரின் படத்தை ஒட்டுவது மிகவும் தவறு.

* ஆர். ஜெ. பாலன், சிவகங்கை.

? 'திருமணமான பெண்ணைப் போய்க் கதாநாயகன் 'சுற்றுவது' போல் காண்பிக்கப்படும் திரைப்படங்கள் தமிழ்ப் பண்பாட்டைக் கெடுக்கின்றன' என அமைச்சர் ராஜாராம் கூறியிருப்பது பற்றி?

! திருமணமான ஆணைச் சுற்றும் பெண்கள் மட்டும் தமிழ்ப் பண்பாட்டை அப்படியே தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறார்களாக்கும். ராஜாராம் பார்க்க வேண்டிய படங்கள் இன்னும் நிறையவே இருக்கின்றன.

* டி. டேவிட் ஜான் பிரிட்டோ, திருத்துறைப் பூண்டி.

? நீதிக்குத் தண்டனை படத்தில், மக்கள் கொடியவர்களுக்கு எதிராக ஆயுதமேந்தியதைப் பார்த்ததால்தான் வங்கியைக் கொள்ளையடித்த பயங்கரவாதிகளை எதிர்த்துத் தாக்கும் தைரியம் தங்களுக்கு வந்தது எனப் பொன்பரப்பி மக்கள் பேட்டியளித்துள்ளார்களே? நீதிக்குத் தண்டனை படத்தைத் தடை செய்யத் துடித்தவர்கள் இதற்கு என்ன சொல்கிறார்களாம்?

! அன்று நீதிக்குத் தண்டனை படத்தைத் தடை செய்யத் துடித்தது தவறு என்றால், இன்று பொன்பரப்பி மக்களுக்கு வீரப் பதக்கமும் ரொக்கப் பரிசும் அளிக்கப் போவதாக அறிவித்திருப்பது அதைவிடப் பெரிய தவறு. மக்கள் உணர்ச்சி வசப்பட்டு சட்டத்தைத் தாங்களே கையில் எடுத்துக் கொண்டு தண்டித்ததைப் பொன்பரப்பியில் நியாயப்படுத்த முடியும். ஆனால் வேறு சந்தர்ப்பங்களில் முடியாது. எனவே அரசு இதுபோன்ற செயல்களை ஊக்குவிப்பது போல் காட்டிக் கொள்ளக் கூடாது.

* கே. எஸ். குமார், மதுரை — 2.

? அரிசி விலை உயர்வு என்ற காரணத்திற்காகக் கலைஞரைத் தண்டித்த மக்கள், இன்று அனைத்துப் பொருள்களின் விலையும் கொடி கட்டிப் பறக்கும்போது மௌனமாக இருப்பதேன்?

! எல்லாப் பொருள்களின் விலையும் உயர்ந்துவிட்டாலும் இன்னும் அத்தியாவசியப் பொருள்களின் விலை — குறிப்பாக அரிசியின் விலை உயரவில்லையே! அதுதான் காரணம். ரேஷன் கார்டுக்கு அரிசி, கோதுமை, சர்க்கரை, பாமாயில், மைதா போன்றவை தட்டுப்பாடின்றிக் கிடைக்கின்றன. இவற்றுள் சர்க்கரை தவிர மற்றவை விலை ஏறவில்லை. ஆனாலும் இது எம். ஜி. ஆரின் சாதனை அல்ல; நாட்டில் ஒட்டுமொத்தமாக நடந்த பசுமைப் புரட்சியின் சாதனையே.

* ஆர். மைதீன் பாட்சா, வல்லம்.

? வீரமணி தாக்கப்பட்டதைக் கொண்டு 'தி. க. வினர் அனைவரும் இனி கத்தியுடன் நடமாட வேண்டும்' என அவர் அறிக்கை விட்டிருப்பது நியாயமா?

! ஒருவேளை வீரமணி இப்போது எம். ஜி. ஆரின் சிஷ்யராகிவிட்டாரோ என்னவோ!

* எஸ். அரிஅரன், திருநெல்லிக்காவல்.

? 'மனிதனுக்குப் பசியே இல்லை என்றால்....' என்ற கேள்விக்கு, எம். ஜி. ஆருக்கு வோட்டுக் குவிவதே சத்துணவால்தான் என்பதுபோல் பதில் கூறியுள்ளீரே! எம். ஜி. ஆர். முதலில் அமோக ஆதரவு பெற்று ஆட்சிக்கு வந்தபோது சத்துணவு போட்டு விட்டா வந்தார்?

! அன்று அவருக்கு உதவியது சினிமா மாயை. இன்று அந்த சினிமா பாபுலாரிடி கிடையாது. அதற்குப் பதில் இலவச மாயை இன்று உதவுகிறது. சத்துணவு, குடம், செருப்பு, வேட்டி — புடைவை, புத்தகம், நிலப்பட்டா என்று பட்டியல் ஒவ்வொரு தேர்தலுக்கும் நீண்டு கொண்டே போகிறது. மக்களை மயக்கும் மாயை இது.

* மு. செந்தில்வாசன், திருமருகல்.

? திரையுலகில் சிறந்த சேவை புரிந்தமைக்காக மத்திய அரசின் 'பால்கே' விருது பெற்ற நாகிரெட்டி பற்றி?

! அம்புலிமாமா கதைகளைப் படமாக்கி மக்களைக் கவலைகளை மறந்து மகிழச் செய்தவர், ''சௌகாரு'' போன்ற உயர்ரகப் படங்களையும் சமுதாய நோக்கோடு எடுத்திருக்கிறார். தவிர திரைப்படத் தயாரிப்பை நவீனப்படுத்துவதில் முன்னோடியாக நின்றவர் நாகிரெட்டி. வண்ணப்படங்களை எடுப்பது மட்டுமின்றி அவற்றை 'பிராசஸ்' செய்யும் வசதிகளையும் வேறு பல நவீனத் தொழில் நுணுக்கங்களையும் கொண்ட வாஹினி ஸ்டூடியோ ஆசியாவிலேயே மிகப் பெரிய ஒன்று.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

டி. டேவிட் ஜான் பிரிட்டோ,
19 — 1. மேட்டுத் தெரு,
திருத்துறைப்பூண்டி — 614 715.

# விரைவில் நிரூபிக்கப்படும்!

* தங்கள் தலையங்கம் "வெளிச்சத்தைத் தேடுகி றோம்," இன்றைய நிலைமைக்கு ஏற்றதாக அமைந்துள் ளது. மதச்சார்ப்பற்ற அரசு என்று நினைத்து மதத்தை, இறையுணர்வையேவெளியேதள்ளிவைத்துவிட்டது. முடிவு அதர்மம், நாணயமற்ற தன்மை, சுயநலம் தலைவிரித்து ஆடுகிறது. அன்று அரசர்கள், முனிபுங்க வர்களை, அல்லது ராஜரிஷிகளைக் கலந்து யோசித்து நாட்டிற்கும் மக்களுக்கும் நன்மை தரும் முடிவுகளை எடுப்பார்கள். இன்று அரசியல்வாதிகள் தங்கள் சுயநலத்திற்காகவே வாழ்கின்ற ஒரு நிலை. ஆகை யினால் சுதந்திரம் அடைந்த நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகும், பல ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பிறகும் நம் முன்னேற்றம் மிகவும் குறைவாக இருக்கிறது. ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி போன்ற பெரியவர்கள் நமக்கு வழிகாட்டும் நிலை மீண்டும் வரவேண்டும். நாட்டிற்குச் சுபிட்சம் ஏற்படும்.

சேலம் — 7. சி. ரங்கநாதன்.

* தங்கள் தலையங்கம் படித்தேன்.

பிரம்ம ஸூத்திரங்கள் எழுதிய வ்யாஸ மஹரிஷி — கௌரவ பாண்டவர்களின் அரசியலிலே புகுந்து பல திருப்பங்களைச் செய்வித்தார் என்பது புரா ணங்கள் கூறும் உண்மை. வித்யாரண்ய ஸ்வாமிகள் அரசியலில் புகுந்து விஜயநகர சாம்ராஜ்யத்தை நிறு வியதும், ஸமர்த்தராமதாஸஸ்வாமிகள் சிவாஜியின் மஹாராஷ்ட்ர சாம்ராஜ்யத்தை நிறுவியதும் சரித்திர உண்மைகள். இவர்கள் ஸன்யாஸிகள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ் வதி ஸ்வாமிகளுக்குக் குரு அருளால் அத்தகைய ஆத்ம சக்தியும் ஆற்றலும் உண்டு என்பது விரைவில் நிரூபிக்கப்படும்.

ஸ்வாமிநாத ஆத்ரேயன்.
ஆஸ்தான வித்வான்,
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்.

(சரித்திர கால மன்னர் ஆட்சிக்கும் இன்றைய நமது அரசியல் சாசனத்துக்கு உட்பட்ட ஜன நாயகத்துக்கும் ஏராளமான வித்தியாசங்கள் உண்டு. இரண்டையும் ஒப்பிடுதல் சரியல்ல.
— ஆசிரியர்.)

ஸ்ரீ ஜெயேந்திரரின் வெளியேற்றத்தைப் பற்றிப் பலரும்பலவாறுகப்பேசிவரும் நேரத்தில், தங்களின் தலையங்கம் படித்தேன். உண்மையை உணர முடிந்தது. கடவுள் பக்திக்கும், தேச பக்திக்கும் வித்தியாசம் காண முடியாமல் மனத்தில் எழுந்த போராட்டத்தின் விளைவே, அவர் வெளியேற்றத்தின் காரணம் என் பதை ரத்தினச் சுருக்கமாய் விளக்கியது தலையங்கம்!

சென்னை—112. சி. துரைராஜ்.

* இன்று ஸ்ரீ ஜயேந்திரர் பரந்த பாட்டைக்குச் சென்றுள்ளார். இதனால் நாட்டிற்கும் மதத்துக்கும் மிகுந்த நலன்கள் ஏற்படும். நான் ஜயேந்திரரை வெகு நன்றாக அறியும் வாய்ப்புப் பெற்றவன். அவரது பரந்த எண்ணங்களை வரவேற்றவன் என்ற முறையில் பட்டுப் பூச்சி கூட்டை அறுத்துக் கொண்டு பறப்பதுபோல் பெரியவர் உலகத்தின் மத்திக்கு சென்றுள்ளார். உலகம் உய்ய என்று எண்ணுகிறேன். இவை எல்லாம் மகா பெரியவர் பரமாச்சாரியர் அருளுடனே, ஆத்மப் பிரக்ஞையுடனேதான் நடக்கின்றன என்பதும் என் துணிபு.

புதுச்சேரி. கி. வேங்கடசுப்ரமணியன்.
துணை வேந்தர், புதுவைப் பல்கலைக் கழகம்.

* ஆகாய அரசி, துர்பா பானர்ஜியின் வெற்றிப் பாதைக்கு, எடுத்துக்கொண்ட விடாமுயற்சியும் தன் னம்பிக்கையுந்தான் காரணம் என்பதை அறியப் பரவசமானேன். தொடர் கட்டுரையாக வெளியிடு வீர்கள் என நினைத்திருந்தேன். ஏமாற்றந்தான், பரவாயில்லை!

நாகலாபுரம். அம்புஜம் ராகவன்.

* பெண்கள் அலுவலகங்களில் பணிபுரிவதற்கே தயங்கித் தயங்கி அனுமதிக்கும் சில பெற்றோர்களின் மத்தியில், தம் மகள் ஆகாய மார்க்கத்தில் பணிபுரிய ஆசைப்படுகிறாள் என்பதைத் தெரிந்துகொண்டு, அதற்கு எவ்வித மறுப்பும் தெரிவிக்காமல் அவரது முயற்சிக்கு மேலும் ஊக்கம் கொடுத்த துர்பா பானர்ஜியின் தந்தையைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை.

விர்ராக்கியம். டி. மகேஷ்.

* அரசியல்வாதி ஜோக்குகளை விட, டேக் இட் ஈஸி ப்ளீஸ்! என்று நீங்கள் டைட்டில் கொடுத்திருந்த விதம் ரொம்பவும் தமாஷ்!

கோவை. உமார்த்தி.

* 'கிருஷ்ணன் வந்தான்- பட விமர்சனம் அருமை யிலும் அருமை! ஒவ்வொருவரியும் நறுக்குத் தெறித் தாற்போல் அமைந்திருந்த விதம், விமர்சனத்தை மீண்டும் ஒரு முறை படிக்கத் தூண்டியது. பிடியுங்கள் எனது பாராட்டுக்களை.!

புத்தனாம்பட்டி. சி. மணி

* சென்றவாரம் வெளியானது சாதாரண 'வம்பு மார்க்கெட்- அல்ல; அதை 'அத்தியாவசிய வம்பு மார்க் கெட்- என்றே அழைக்கலாம்; தப்பில்லை!

கிருஷ்ணகிரி. ஆர். மாதவராமன்.

* ஆயுதப்புரட்சியால் புது உலகைப் படைக்கத் துடிக்கும் தயாளன் போன்ற நபர்களை நல்வழிப்படுத்த சுதனைப் போன்ற நண்பர்கள் பெருக வேண்டும். இன்றைய சமுதாயச் சூழலுக்கு ஏற்ற கதையை எழுதிய "ஒரு பேனாவின் மரணம்" ஆசிரியருக்கு நன்றி.

விழுப்புரம். எம். நடராஜ்.

* போட்டிக்கதையில் ஒரு பேனாவை மரணப்படுத் தியது கதைப்படி நியாயம் என்றாலும், அது அநியா யமே. மனம் திருந்தியவன் வாழவே முடியாதா?

சென்னை—52. அ. ஜமால்மொய்தீன்.

* பல ஆச்சரியமான உண்மைத் தகவல்களைத் தந்து, மூக்கின் மேல் விரல் வைக்க வைத்த 'டுப் டுப் நம் பாதிர்கள்' பகுதியை தொடர்ந்து எதிர்பார்க்கிறோம்!

காரமாங்குடி. ஜி.வி. ருக்மணி

* நியாயம் தெரிந்ததும், 'ஆசிரியர் போராட்டம் நியாயம் தான்' என்று ஏற்றுக் கொண்டதோடு, என் கேள்விக்குப் பரிசும் அளித்த 'தராசு'வின் தராசு நிலையை எண்ணி வியந்து மகிழ்ந்தேன். நியாயத்தை ஒத்துக் கொண்டமைக்கு முதல் நன்றி; பரிசுக்கு இரண்டாம் நன்றி!

மதுரை—20. மதுரை ஜோ.



• கணேசத் தேவர்

# "எங்கள் நகராட்சி எல்லை கூட எங்களுக்குத் தெரியாது..."

— பல்லாவரம் நகராட்சித் தலைவர் கூறுகிறார்

**"ப**ல்லாவரத்திலும் சரி, பல்லாவரத்திற்கு உட்பட்ட குரோம்பேட்டையிலும் சரி, ஏராளமான பிரச்னைகள் இருப்பதாக மக்கள் முறையிடுகிறார்களே...?" என்று பல்லாவரம் நகராட்சித்தலைவர் கே. கணேசத் தேவரிடம் கேட்டதுதான் தாமதம், அவரும் ஜனங்களைப் போலவே நம்மிடம் பிரச்னைகளைக் கூற ஆரம்பித்து விட்டார்!

"எல்லா இடங்களைப் போலவே எங்கள் நகராட்சியிலும் குறைகள் இருப்பது வாஸ்தவம்தான். அங்கங்கே சாக்கடை நீர் தேங்கி நிற்கிறது. அதற்குப் பாதாளச் சாக்கடை வராமல் விமோசனமே இல்லை. அதற்காகத் தான் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். தோல் பதனிடும் தொழிற்சாலைக் கழிவு நீரால் சுகாதாரக் கேடு ஏற்படுகிறதென்றால், நாங்கள் என்ன செய்ய முடியும்? நாங்களும் புகார்தான் செய்ய முடியும். நடவடிக்கை எடுக்க வேண்டியது அதிகாரிகள். அவர்கள் செய்தால்தானே!

"நகராட்சியிலுள்ள குப்பை கூளங்களைச் சுத்தப்படுத்தக் குறைந்தபட்சம் இருநூற்றைம்பது துப்புரவுத் தொழிலாளர்களாவது தேவை. ஆனால் இருப்பதோ வெறும் நூற்று முப்பது பேர்தான். இந்நிலையில் எப்படிச் சுத்தமாக வைத்துக் கொள்ள முடியும்? மேற்கொண்டு தொழிலாளர்கள் வேண்டுமென்று நாங்கள் தீர்மானம்தான் போட்டு அனுப்ப முடியும். அனுமதி தர வேண்டியது அரசு. அனுமதி கொடுத்தால்தானே! அப்படியே அனுமதி கொடுத்தாலும் குப்பை கூளங்களைக் கொண்டு போய்க் கொட்டுவதற்கென்று பல்லாவரம் நகராட்சிக்கு இதுவரை ஓர் இடம் கிடையாது சார்! என்ன செய்வார்கள் தொழிலாளர்கள்?

"கடந்த 85 — 86 ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கு என்ன என்பது இதுவரை தெரியாது. இன்னும் ஆடிட்டே நடக்கவில்லை. காரணம் அக்கவுண்டன்ட் இல்லை என்கிறார்கள். இதைவிடப் பெரிய கூத்து என்னவென்றால், பல்லாவரம் நகராட்சிக்கான எல்லைகள் என்னவென்று தலைவரான எனக்கே தெரியாது. ஏனெனில், சர்வே செய்து எல்லைகளை வகுக்க வேண்டிய வருவாய்த் துறையினர் இன்று வரை சர்வே செய்யவே இல்லை. என்ன செய்யச் சொல்கிறீர்கள்?

"**நீ**ங்களே பார்த்திருப்பீர்கள்... குரோம்பேட்டை ஜி. எஸ். டி. ரோடில் ஒரு பெட்ரோல் பங்க். சுடுகாட்டை ஒட்டியே இருக்கிறது அது. சுடுகாட்டுக்கு அருகில் பெட்ரோல் பங்க் இருந்தால் விபத்துக்கு வழி வகுக்காதா? அதற்கு எப்படி அனுமதி கொடுத்தார்கள் அதிகாரிகள்? உண்மையில் அது சட்டத்திற்குப் புறம்பானது. அதனால் தான் அந்தப் பெட்ரோல் பங்கின் திறப்பு விழாவுக்கு நான் அழைக்கப்பட்டிருந்தும் போகவில்லை. அதை நாங்கள் நகராட்சித் தீர்மானத்திலும் அங்கீகரிக்கவில்லை. சட்டப்படி நகர எல்லைக்குள் வீடு கட்ட எம். எம். டி. ஏ. வின் அனுமதி வாங்க வேண்டும். ஆனால் அப்படி அனுமதி வாங்காமலேயே சிலர் வீடு கட்டுகிறார்கள். பிறகு அனுமதி வாங்கிக் கொள்கிறார்கள். இது எப்படி? இதற்கெல்லாம் ஒரு நகராட்சித் தலைவர் என்ன செய்ய முடியும்?

"நாங்கள் வந்து நகராட்சியில் பொறுப்பேற்கும் போது, ஒரே மாதிரியான இரண்டு வீடுகளுக்கு இரண்டு விதமான வரிகள் போடப்பட்டிருந்தன! இதற்கு என்ன காரணம்? லஞ்சம். அதனால்தான் ஒரே மாதிரியான வீடுகளுக்கு அவை நகருக்குள் இருக்கும் இடத்தின் முக்கியத்துவத்தைப் பொறுத்து ஒரே மாதிரியான வரியை நிர்ணயித்தோம். இதில் லஞ்சத்திற்கே வாய்ப்பில்லை. இதில் மக்களுக்குச் சந்தோஷம் தான். ஆனால், ஒவ்வொருவரும் குடிநீர்க் கட்டணமாக மாதா மாதம் குறைந்தபட்சம் இருபத்தைந்து ரூபாயும் பிறகு மீட்டருக்குத் தகுந்தாற் போலவும் கட்ட வேண்டியிருப்பதில் மக்களுக்கு அதிருப்தியே. என்ன செய்வது? கூட்டுக் குடிநீர்த் திட்டத்திற்குச் செலவானதில் பல்லாவரம் நகராட்சியின் பங்கு ஒன்பதரைக் கோடி ரூபாய். அது முழுவதும் எல். ஐ. சி. கடன். அதை அடைக்க வேறு வழி தெரியவில்லை..." என்றார் கணேசத் தேவர்.

சந்திப்பு: **பிரின்ஸ்**

# நிழல் யுத்தம்

பாலகுமாரன்

24

லலிதா குழந்தையைத் தூக்கிக் கொண்டு சனிக்கிழமையே முரளியின் அம்மாவீட்டுக்குப் போனாள். எண்ணி இரண்டே மணி நேரம் உட்கார்ந்து பேசி விட்டுத் திரும்பினாள். மறுநாள் வருவதற்கில்லை என்று சூசகமாய்ச் சொன்னாள். கிழவிக்குச் சொன்ன சொல் தவறாமல், ஒப்பந்தத் தேதிக்கு முன்தினமே மருமகள் வந்து பேசியது பெரிய சந்தோஷம்.

"ஞாயித்துக் கிழமைங்கறது என்ன சட்டமா? முடிஞ்சபோது வா, போறும்!"

ஒண்டுக் குடித்தனங்கள் எட்டிப் பார்த்துப் புன்முறுவல் பூத்துவிட்டுப் போயின. லலிதா கிளம்பும் போது ஒவ்வொரு குடித்தனமும் அவரவர் வீட்டு வாசலில் நின்று அவள் போவதை வேடிக்கை பார்த்தது. குடித்தனத்தில் ஒன்று, துணிந்து லலிதாவின் புருவ ஒழுங்கு பற்றிக் கேள்வி கேட்டது.

'பெக் யுவர் பார்டன்' என்று ஆங்கிலத்தில் பேச, 'ஒன்றுமில்லே' என்று ஒளிந்து கொண்டு விட்டது.

'பியூட்டி பார்லர் பற்றியும் அங்கு செய்யப்படும் ஒழுங்கு பற்றியும் சொல்லித் தரலாம். கேட்டதற்குத் தெளிவாய்ப் பதில் சொல்லலாம். ஆனால் கேட்டது என்ன ஜாதி என்று தெரியவில்லை.

'பொம்மனாட்டி முடி எடுக்கலாமா? குடும்பப் பெண்ணுக்கு அழகா? தப்புன்னு பெரியவா சொல்லியிருக்கா' என்று ஆரம்பித்து விட்டால்...

கேட்டவளுக்கு ஆசையிருக்கும். தானும் அது போல்... என்று எண்ணம் வரும். முடியாது. ஏழு ரூபாய் கொடுத்துப் புருவம் ஒதுக்கிக் கொள்ள வசதியிருக்காது...

பெரியவா தப்புன்னு



சொல்லியிருக்கா என்று நொடிக்கத் துவங்கும்.

ஜாதி என்பது இப்போது குலம் கோத்திரத்தில் இல்லே. தொழிலில் இல்லே. பிறப்பில் இல்லே. வசதியில் இருக்கிறது. பொருளாதாரம் பிரித்து வைத்திருக்கிறது.

ப்ளீச்சிங்னு எப்படி? முகம் மட்டுமா, கையெல்லாம் கூட பண்ணிக்கலாமா? இம்போர்டட் ப்ளீச்சிங்னு அதிகமாக் காசு வாங்குவாளா, எண்பது ரூபாய் ஆகுமா? வேறே வேலே இல்லே... இந்த மாசம் பாமாயில்,சர்க்கரை ரேஷன்ல கூட தர்ருன். அதை வாங்கறதுக்கே முழி பிதுங்கறது. நீங்க பாமாயில் வாங்கறேளா...?

"இல்லே. ரேஷன் கடைக்கே போறதில்லே."

புருவம் மறந்து போகும். 'கார்டு தாங்களேன்' என்று கெஞ்சும். 'லிப்ஸ்டிக், மேக்கப் எல்லாம் போட்டுக்கருளே தவிர, லலிதா ரொம்ப நல்லவ' என்று கார்டு வாங்கிக் கொண்டு பேசும்.

'கார்டு எங்கேன்னு தெரியலேயே...' என்ருல், 'பாட்டி காசுக்கு ஆசைப்பட்டு இந்த மருமகளேக் கூட்டிண்டு வந்துட்டா. இப்ப கையைப் பிடிக்கவும் முடியலே. காலேப் பிடிக்கவும் முடியலே. முதல்ல யாரோ சினிமால நடிக்கறவன்னு நினேச்சேன். பாட்டி இவதான் மருமகள்ங்கரு. சேன்னு போயிடுத்து...' பொருளாதாரப் பிரிவு பொருமை வளர்த்துப் பிரிந்து போகும்.

கிழவியின் மிரட்சியும் இதுதான். காசு இல்லே என்பதால் மதிக்க மாட்டார்களோ என்கிற கவலேதான். அதே நேரம் நாலு பேர் மருமகள் பற்றிக் கேட்டால் வந்து போய்க் கொண்டிருப்பதாகச் சொல்ல வேண்டிய நிர்ப்பந்தமும் வாய்த்து விட்டது. தொடாமல் நெளிந்து நெளிந்து கோலாட்டம் ஆடத் தோன்றுகிறது.

இந்தச் சந்து வீட்டில் ஏறும் போதே, இவர்களே எப்படிச் சமாளிப்பது என்கிற கவலேதான் வருகிறது. என்ன பேசுகிருர்கள் தன்னேப் பற்றி என்கிற ஆர்வமும் எழுகிறது.

புருவ ஒதுக்கம் பற்றிக் கேட்டவளே அவள் புருஷன் 'ஏய்' என்றுதான் கூப்பிடுகிருன். இதுவும் கால் பின்ன ஓடுகிறது. புருஷன் இல்லாத போது, வாசலில் நின்று வருவோர் போவோரைப் பற்றி வம்பு பேசுகிறது. பாமாயில் கனவு காண்கிறது.

முரளி இங்கே வளர்ந்தவன். இன்னிக்கு என்ன கறி என்று கேட்டுக் கொண்டே சாப்பிட உட்காருகிறவன். கோபமும் எரிச்சலும் பொருமையும் பொருளாதாரத்துடன் சம்பந்தப்பட்டது. இல்லாமை கொடுக்கிற ஆத்திரம், துவேஷம் வளர்க்கிறது. பேசுபவர்களிடம் குற்றம் கண்டுபிடிக்கிறது. ஆயிரம் ரூபாய் சம்பாதிக்க முடியாத ஆத்திரம் பெண்டாட்டியை 'ஏய்' என்று அதட்ட வைக்கிறது.

இது என்ன சம்பாத்தியம் என்று கேட்டு



"ஒருவாறு போஃபார்ஸ் ஃபேர்பாக்ஸ் வந்தது நமக்குச் சௌகரியமாப் போச்சா? எப்படி...?"

"ஆமாம், நம்ம ஊழல் எல்லாம் பெரிசாத் தெரியலே பாருங்க!"

— கடுவை கோபால்சாமி.

விடுவாளோ என்று பயந்து 'ஏய்' என்று அதட்ட வைக்கிறது. வெறும் உடல் ஆளுமையில் வீழ்த்த வைக்கிறது.

ஆண் என்ன ஆளுமை, செய்துவிட முடியும்! எந்தக் காலத்தில் பெண்ணே அடக்கி வைத்துவிட முடியும்?

நினேக்க நினேக்க ஆத்திரம் பொங்கிற்று. துடைத்து விட்டுப் போ என்கிற கட்டளையை மீற வைத்தது. மதித்தால் ஆயிரம் உபசரணே பண்ணலாம். கேட்காமலேயே செய்யலாம். அங்குலம் அங்குலமாய்த் துடைக்கலாம். பொட்டைக் கட்டளே பேசும் போது தான் ரௌத்திரம் வருகிறது.

சனிக்கிழமை போய் வந்தது பற்றி லலிதா பேசவேயில்லே. ஞாயிறு அன்று வீட்டுக்குக் கிளம்பு என்று முரளி வற்புறுத்தியபோது, தலேவலி என்று சொல்லி விட்டாள்.

முரளி தான் மட்டும் கிளம்பிப் போனுன். அங்கு போய்த்தான் லலிதா சனிக்கிழமையே வந்து போனது தெரிந்து கொண்டான். அரை மணி உட்கார்ந்து விட்டு நிலே கொள்ளாமல் திரும்பி வந்தான்.

"லலிதா, அடுத்த ஞாயிறு இரண்டு பேரும் சேர்ந்து போருேம்."

"ஸாரி."

"ஏன்?"

"அப்படி ஒண்ணும் அக்ரிமெண்ட் இல்லே. எனக்கு முடிஞ்ச போது போயிட்டு வர்றேன்."

"என் கூட வந்தால் என்ன?"

"எதுக்கு வரணும்?"

"ஏன் வரக் கூடாது?"

"மதிக்கறவாளே மதிக்கணும். உங்கம்மா என்னே மதிக்கிறு. நான் பதிலுக்கு மரியாதையா இருப்பேன். ஏய் ஙய்ங்கற ஆளோட வெளியே போக முடியாது."

"லலிதா, எனக்குக் கோபம் வரும்."

"உங்களேவிடப் பத்து மடங்கு கோபம் எனக்கும் வரும்."

"என்ன செய்வே?"

"ஐ வில் கோ டு எனி எக்ஸ்டண்ட்."

"அடுத்த ஞாயித்துக்கிழமை?"

"உங்களோட வர முடியாது; மாட்டேன்."

என்ன செய்வது என்று தெரியவில்லை. எப்படி மடக்குவது என்று புரியவில்லை.

அடுத்த முறை வெள்ளிக்கிழமையே போய் அம்மாவைக் காரில் ஏற்றிக்கொண்டு குழந்தை இடுப்புக்குத் தங்க அரணை செய்ய நகைக் கடைக்குப் போனான். கண்ணாடி பீரோ நிறையக் கொத்துக் கொத்தாய் நகைகள் தொங்கும் கடையைக் கிழவி இதற்கு முன் பார்த்ததேயில்லை. நாலு கடைகளுக்கு மேல் ஏறி இறங்கவும் முடியவில்லை. மேலே காசு போட்டுப் புது அரணை வாங்கித்தன் வீட்டுக்கு வந்து, மாமியாருக்குக் காபி போட்டுக் கொடுத்து லலிதா மறுபடி அவள் வீட்டுக்குக் காரிலேயே கொண்டு போய் விட்டுவிட்டு வந்தாள். வீட்டுப் படியேறவில்லை.

முரளி வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக நகைக் கடைகளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தாளே தவிர முரளியின் முனகல் எதுவும் அவளுக்குத் தெரியவில்லை.

"நகைக் கடைக்கெல்லாம் நீயேன் அலையறே?"

"ஏன்... நான் போகாத யார் போவா? ஏறி உட்கார்ந்தா அஞ்சு நிமிஷத்துல மாம்பலம்." கிழவிக்கு அஞ்சு நிமிஷத்துல மாம்பலம் என்பது கூடப் புதுமையாய் இருந்தது.

"அடக்கமேயில்லே லலிதாவுக்கு."

"போறும். போர்த்திண்டு போர்த்திண்டு இங்க இருக்கறதுகள் பண்ற கூத்து எனக்குத் தெரியும். கார் ஓட்டறுங்கறது ஒரு தப்பா? கெட்டிக்காரி. சாமர்த்தியம். நல்லது கெட்டது தெரிஞ்சிருக்கு."

எடுபடவேயில்லை. முரளியின் எந்தப் புகாரும் கேட்கப்படவேயில்லை. லலிதாவையும் 'ஏய்' என்று கூப்பிட முடியவில்லை. குழந்தையை எடுத்துக் கொண்டு சுத்தமாய் நகர்ந்து விட்டாள். வேறு அறைக்குப் படுக்கையை மாற்றிக் கொண்டு விட்டாள்.

கொஞ்ச வெட்கமாய் இருந்தது. பதிலுக்குத் துடைத்துவிடு என்று சொல்லிவிடுவாளோ? என்று பயமாக இருந்தது.

வெறுமை அதிகம் கவிழ்ந்தது. ஆபீஸுக்குப் போவது, படிப்பது, எப்போதாவது சினிமாவுக்குப் போவது.... என்று தனிமையில் முடங்க வேண்டியிருந்தது.

மறுபடி லலிதா உண்டாகியிருக்கிறாள் என்பது வேலைக்காரியின் பேச்சில்தான் தெரிந்து கொள்ள முடிந்தது. இருபத்து நான்கு நாட்கள் ஒரு வார்த்தை கூட மனைவியோடு பேசாமல் இருந்தது, ஒருபுறம் வேதனையாகவும் ஒருபுறம் திமிராகவும் தெரிந்தது.

இன்று இரவு பேசி விடலாமா என்று தோன்றிற்று. ஆபீஸ் நேரம் முழுவதும்



# ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகிவரும் கூட்டத்திலே சேருங்கள்






"ஆகா!...எத்தனை வசதி."



**ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன். பெண் – அழகுப் படைப்பாளர் லக்மே அளிப்பது.**

ஏராளமான பெண்கள் ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷனின் பெருகிவரும் கூட்டத்திலே சேர்ந்து வருகிறார்கள். இதில் வியப்பில்லையே! காரணம், ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி லோஷன் உபயோகிப்பதற்கு மிகவும் வசதியானது.

இது சீராகவும் எளிதாகவும் பரவுகிறது.

அதாவது, இதிலே சள்ளை இல்லை, தொல்லை இல்லை. அதைவிடவும் ஒன்று: இதை தயாரித்தவர்கள் லக்மே! இதே லக்மேயிடம்தான், அழகு மற்றும் சருமப் பராமரிப்பிற்காக பெண்கள் முழு நம்பிக்கை வைத்துள்ளனர்.

வாருங்கள் நீங்களும் ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகி வரும் கூட்டத்திலே சேருங்கள்.

பட்டுப்போன்ற மென்மையை அங்கமெங்கும் அளியுங்கள்.

**லக்மே**

இதே யோசனையாய் இருந்தது. வீடு வந்ததும் பையனை எடுத்துக் கொண்டு மேல் மாடிக்குப் போனான். தென்னை மரம், மேகம், காகம் என்று காட்டினான். தொடர்ந்து மனைவியும் வருவாள் என்று நம்பினான்.

"அம்மா குழந்தையை எடுத்தாரச் சொன்னாங்க" என்று வேலைக்காரி மேலே வந்தாள். பையனை எடுத்துக் கொண்டு கீழே போனான்.

மறுபடி வெறுமை நெஞ்சைக் கவ்வியது. சுற்றியிருக்கும் தென்னை மரம் காகம் மேகம் கூட அலட்சியம் செய்தன.

இறங்கிக் கீழே வந்தான். சாப்பிட்டான். அறைக்குப் போய் காலை பேப்பர் படித்தான். சமையலறை ஓசை அடங்கியதும் எழுந்து மனைவியின் அறைக்குப் போனான். படித்துக் கொண்டிருந்தாள். இவன் வருகையை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தொடர்ந்து படித்தாள்.

"மே ஐ கம் இன்" என்று வாசலிலிருந்து குரல் கொடுத்தான்.

லலிதா புத்தகத்தைத் தூக்கிப் பின்பக்கம் போட்டாள். விளக்கை அணைத்தாள்.

புரியவில்லை.

"நான் கேட்டது காதுல விழலே?"

"விழுந்தது. நான் ரெடி." இருட்டிலிருந்து குரல் புறப்பட்டது.

"நான் ரெடி. எதுக்கு?" முரளி முனகினான்; முகம் சுளித்தான். வாசல் கதவையே இறுகப் பிடித்துக் கொண்டு நின்றான்.

"நான் பேசறதுக்கு வந்தேன்."

லலிதா சிரித்தாள். அந்தச் சிரிப்பில் அலட்சியம் இருந்தது. அந்த அலட்சியம் முரளிக்குக் கோபம் கொடுத்தது.

"உள்ளே வரட்டுமான்னு நான் கேட்டது இதுக்குத்தான்னு நினைக்கறியா?"

"பேசறதுக்கு ராத்திரிதான் நல்ல டைம்னு நீங்க நினைக்கறேளா?"

"பகல் நேரத்துல ஆபீஸ் இருக்கு."

"ஞாயித்துக்கிழமைன்னு ஒண்ணு இருக்கே. மூணு ஞாயித்துக்கிழமை பேசாம தானே போச்சு."

"அது உன் தப்பு. என் கூட நீ வெளியே வரவேயில்லே."

"வர மாட்டேன்."

"ஏன்?"

"வேறெங்கேயாவது போய்த் துடைச்சு விடுடிங்கற ஒரு அவமானம் எனக்கு வர வேண்டாம்."

"புருஷன் இப்படிக் கேட்கறது அவமானமா?"

"புருஷன் இப்படிக் கேட்க மாட்டான்."

"உன்னை நான் கெஞ்சணும்; சீராட்டணும்; தலேல வெச்சு உன்னை மாதிரி உண்டான்னு ஆடணும்."

"எஸ்."

"அப்படி என்ன உசத்தி?"

"என்ன தாழ்த்தி...? என்ன குறைச்சல்?"

"......"

"உங்க அம்மாவைக் கொண்டாடுன்னு நீங்க கட்டளை போடலாம். என்னைக் கொண்டாடுன்னு நான் கேட்கக் கூடாதா?"

"நீ அரைமணியை அறுத்து எறிஞ்சப்புறமும் நீ என்ன தப்புப் பண்ணினாலும் உட்கார்ந்து பார்க்கணுமா?"

"தப்பு சரிங்கறது அவரவர் மனசைப் பொறுத்த விஷயம். தனியாக் கூப்பிட்டுக் கேட்டிருக்கலாம். என் பதில் சரியில்லேன்னு கண்டிச்சிருக்கலாம். அம்மாவைக் கோவில்ல பார்த்துட்டுப் பொண்டாட்டியைத் தெருவுல வைச்சு அடிக்கறது நிச்சயம் உசத்தியில்லே."

"நான் மன்னிப்புக் கேட்கணுமா?"

"நிச்சயமா."

"முடியாது."

"அதான் கேட்கலே."

"கதவைத் தாழ் போட்டு மறுபடியும் நான் முரட்டுத்தனம் காட்ட முடியாதா?"

"என்ன முரட்டுத்தனம்?"

"எல்லா முரட்டுத்தனமும் காட்ட முடியும்."

"முட்டாள்தனம். பொம்பளைய முரட்டுத்தனம் காட்டி அடக்கிட முடியுமா?"

"ஏய்."

"உங்களால எவ்வளவு முரட்டுத்தனம் காட்ட முடியும்னு எனக்குத் தெரியும்."

"வாட் டு யூ மீன்."

"ஐ மீன் எவ்ரிதிங்."

முரளிக்கு உடம்பு முழுவதும் கொதித்தது. நிழலாய் உட்கார்ந்திருக்கும் மனைவியை ஆளுமை செய்து அடக்கும் வெறி கிளர்ந்தது.

திரும்பினான். கதவை மூடினான். வெளியேறினான்.

உடம்பின் தகிப்பு மனத்தில் படர்ந்தது. மனம் பொசுங்கும் வாடை புத்திக்குத் தெரிந்தது.

(தொடரும்)



பரீட்சை ஹாலில்....

**ஆசிரியர்:** டேய், என்னடா மேலே பார்க்கிறே...?

**மாணவன்:** ஒரு கேள்விக்குக் கூட எனக்குப் பதில் எழுதத் தெரியலே சார்...!

**ஆசிரியர்:** அதுக்காக நீ மேலே பார்த்துப் புண்ணியமில்லே. உங்க அப்பாவைப் போய் 'மேலே' பார்க்கச் சொல்லு!

— சுரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# நிற்க நிழல் வேண்டும்!

வாஸந்தி

## 8

"ஜயசிலன்! சிலன்!"

மடிமேல் விரித்துக் கிடந்த பாடப் புத்தகத்தைப் பட்டென்று மூடி வைத்து ஜஸ்டினின் குரல் வந்த திசையை நோக்கி, ஜயசிலன் கொல்லைப்புறம் ஓடினான்.

வேலிக்கு அப்பால் நின்றிருந்த ஜஸ்டினின் முகம் உணர்ச்சி வசப்பட்டுப் பளபளத்தது. அருகில் நின்றிருந்த சீலியாவின் முகத்திலும் பரபரப்புத் தெரிந்தது. ஜஸ்டின் ஏதும் சொல்வதற்கு முன் ஜயசிலனுக்கு அடி வயிறு ஜில்லிட்டது.

"சிவகுமாரன் செத்துப் போயிட்டான் சிலன்!"

"எப்படி?" என்றான் ஜயசிலன் அதிர்ந்து. இரண்டு நாட்களுக்கு முன் சிவகுமாரன் வீட்டுக் கதவை இடித்ததைச் சொல்வதா வேண்டாமா என்று யோசித்தபடி.

"வேறு எப்படி? ஒரு வீரனைப் போல செத்தான்!"

ஜஸ்டினின் கண்களில் நீர் திரையிட்டது.

துவக்குக்கு ரவை வாங்கப் பணம் இல்லையாம். பல பேரிடம் பணம் கேட்டிருக்கான். யாரும் உதவ இல்லே. போலீஸ் வளைச்ச போது, நண்பர்களைத் தப்பி ஓடச் சொன்னானாம். இவனும் ஒரு புகையிலைத் தோட்டத்துக்குள் பதுங்கி ஓடியிருக்கான். அறுவடையான இடம். முள்ளோ, கட்டையோ காலில் குத்தி வேகமாக ஓட முடியல்லே. போலீஸ் பிடித்துக் கொண்டது. தொடையைக் கத்தியால் கிழிக்க ஸயனைடை ரத்தத்தில் கலக்கப் பார்த்தான். போலீஸ் கத்தியைப் பிடுங்கிக்கிட்டதும் நஞ்சை வாயிலே ஊற்றி விழுங்கிட்டான்."

சிவகுமாரன் கூடவே தானும் ஓடிப் பார்த்தது போல் ஜஸ்டின் விவரிக்க, ஜயசிலனுக்குக் குடல் நடுங்கிற்று. அடேயப்பா, எத்தனை தீரன் அந்தச் சிவகுமாரன் என்று ஆச்சரியம் ஏற்பட்டது.

"அவனுடைய சினேகிதர்கள்?"

"எங்கோ பதுங்கி இருக்கான்கள். போலீஸ் அவன்களையும் வளைச்சுப் போடும்."

சற்று முன் பிரவாகமாய்ப் பொங்கிய மனம் ஆரவாரமில்லாமல் அடங்கி யதார்த்



தத்துக்கு வந்தது. கண்களில் நிரம்பிய நீரை மறைக்க அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

''தேவநேசன் எங்கேயாவது பத்திரமா இருப்பான் சீலன், கவலைப்படாதே!'' என்றாள் சீலியா.

அவளுடைய இதம் அவனை அதிகமாகக் கலக்கிற்று. அழுகை வெடித்துவிடும் போல் இருந்தது. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு ஜஸ்டினைப் பார்த்தான்.

''சும்மா இப்படிக் காரியம் ஆகாமல் பிடிபட்டுச் சாகறதிலே என்ன லாபம், ஜஸ்டின்?''

''நம்ம ஆளுங்களே நமக்கு எதிரிகள். துவக்குக்கு ரவை வாங்கப் பணம் யாரும் கொடுத்து உதவ இல்லே. ரவை இருந்தால் தீர்த்துக் கட்டியிருப்பான். போலீஸ் கையிலே சாகறது அவமானம் எண்டு தன்னையே முடிச்சுக்கிட்டான்.''

ஜயசீலன் இன்னும் குழப்பத்துடனேயே நின்றான்.

''தமிழன் இளைச்சவன் இல்லேன்னு நாம ஆயுதமேந்திக் காண்பிச்சா சிங்கள அரசுக்குத் தொந்தரவு. வெறும் பட்டினிப் போராட்டம் செய்த நம்ம பெரியவங்களை இத்தனை நாட்களும்லட்சியமேசெய்யல்லே. அவங்க கிட்டே ஆயுதம் இல்லே என்கிற தைரியத்திலே சத்தியாக்கிரகிகளைப் போலீஸ் தடியாலே மொத்தல்லே? நாம ஏன் இவனண்டை அடி வாங்கணும்? இவனுக்கு நாம என்ன குறைஞ்சு போனோம்? அதோடு பார், அவன் என்ன தப்புச் செஞ்சாலும் அதுக்கு விளக்கம் கிடையாது. மாநாட்டிலே நடந்த சாவுக்கும் கலவரத்துக்கும் ஒரு விசாரணையும் நடத்த இல்லே. யாருக்கும் தண்டனையும் இல்லே. போன வருஷம் நினைவிருக்கா, தரப்படுத்தல் சட்டத்தை எதிர்த்துத் தமிழ் மாணவர்கள் காலேஜுக்கும் பள்ளிக்கும் போகாமல் ஸ்ட்ரைக் செஞ்சபோது, எத்தனை மாணவர்களைக் கைது செய்து கொண்டு போனார்கள்? இன்னும் கன பேர் சிறையிலே இருக்கான்கள். வெளியிலே விடப்பட்டவன்களும் எந்தக் குற்றமும் ருசு ஆகாமல் விடுதலையானவர்கள். அவசர நிலைமைன்னு ஒரு நிலையை வெச்சுப் போலீஸ் என்ன வேணுமானாலும் செய்ய அதிகாரம் கொடுத்திருக்கு அரசு. இந்த மாதிரியான நிலையிலே பட்டினிப் போராட்டத்தாலே என்ன நடக்கும்? நாம ஆயுதம் ஏந்தினால்தான் தமிழனுக்கும் கொஞ்சம் ரோஷம் உண்டு என்கிறது அரசுக்கு விளங்கும்...''

ஜயசீலனுக்கே இப்பொழுது மெல்ல மெல்ல எல்லாம் விளங்குவது போல் இருந்தது. அடேயப்பா, இந்த ஜஸ்டின் என்னமாய் எல்லா விஷயங்களையும் பிட்டுப் பிட்டு வைக்கிறான்! தேவநேசனின் காரியம் எல்லாமே ரகசியமானது. அவன் எந்த அரசியலையும் அவனிடம் விளக்கியதில்லை. ஆனால், ஜஸ்டின் வெறும் பேச்சாளி, காரியம் என்று வந்தால் ஒதுங்கி விடுவான் என்று தோன்றிற்று. மற்ற பொடியன்கள் போராட்டத்தில் செத்தால் அவர்களுக்கு இரங்கல் செலுத்த இவன் சரியான ஆள்.

''ஜயசீலன்!''

உள்ளேயிருந்து வந்த அம்மாவின் குரல் கேட்டு அவன் சுயநினைவுக்கு வந்தான்.

''பார்த்துக் கொண்டேயிரு. இன்னும் கொஞ்ச நாட்களிலே சந்திரசேகராவையும் துரையப்பாவையும் சிவகுமாரனுடைய சிநேகிதர்கள் தீர்த்துக் கட்டிப்பிடுவான்கள்.''

ஜஸ்டினின் பேச்சுக்கு மறுமொழி ஏதும் சொல்லாமல் அவன் உள்ளே சென்றான்.

சமையல் அறையில் அம்மா இரண்டு கோப்பைகளில் தேநீரை நிரப்பிக் கொண்டிருந்தாள். அவனைப் பார்த்ததும், ''என்ன எப்பப் பார்த்தாலும் அந்த ஜஸ்டினோடு பேச்சு?'' என்று சிடுசிடுத்தாள்.

''ராசமாணிக்கம் ஐயா வந்திருக்கார். இந்தத் தேத்தண்ணியைக் கொண்டு போய்க் கொடு'' என்றாள்.

அவன் பதில் ஏதும் சொல்லாமல் தன்னுடைய பொங்கிய கண்களை அம்மா பார்த்து விடக் கூடாது என்கிற எச்சரிக்கையுடன்

# மாதம் ஒரு மாவட்டம்

**நீலகிரி மாவட்ட மக்களுக்கு, நினைவூட்டுகிறோம்!**



**கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், பத்தொன்பதாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது நீலகிரி மாவட்டம்தான். ஆகவே, உங்கள் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும் அநீதிகளும் அக்கிரமங்களும் தவிர, சாதனைகளும் ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.9.87 என்பதை மீண்டும் நினைவுபடுத்துகிறோம்.**

**உடனடியாக எழுதியனுப்புங்கள்!**

— ஆசிரியர்



**"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."**

அந்த நாட்கள் எனக்கு இன்னும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப் போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது, மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரமப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

உலர்வும் சுகமும்

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக் கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது. நீண்ட, அகன்ற, தடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு



அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்... அதுதான் கேர்ஃப்ரீ வசதி... கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்- இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு







## கேர்ஃப்ரீ. காரணம், காலம் மாறுவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

OBM/9072/TAM



# மழை பெய்ய பெருவெள்ளத்தைத் தடுக்க

## ஆத்ரேயர் மகரிஷி கூறும் வழி

ஒரு தேசத்திற்கோ அல்லது கிராமத்திற்கோ தலைவராய் உள்ளவர் கர்ம நெறியில் ஜனங்களை நடத்தினால் அவனை அனுசரித்து தேசத்தினர், நகரத்தினர், அல்லது கிராமத்தினர் அந்த தர்மத்தையே பெருக்கி வருவார்கள். அந்த தர்மம் அதர்மத்தை மறைத்துவிடும். அதர்மம் மறைந்துவிடவே பிராணிகள் தேவர்களால் காப்பாற்றப்படுவார்கள். அப் பொழுது ருதுக்கள் முதலிய காலங்கள் மாறாமல் இருக்கும். அதனால் மழை சரியாக பெய்யும். காலந் தவறாமல், இடந் தவறாமல் அளவு தவறாமல் பெய்யும்.

பருவக்காற்று சரியாக வீசும். ஆகையால் பூமி கெடாது. செடிக் கொடிகள் தங்கள் குணங்களில் மாறுதல் அடையாது. அப்பொழுது தேசமே நல்ல காற்று முதலியவற்றாலும் சாப்பிடும் பதார்த்தங்கள் தோஷம் இல்லாமல் செழிப்பு அடையலாம்.

ஆகையால் தேவர்களைத் திரும்பவும் நமக்கு அனுகூலமாக விருக்கும்படி நல்ல காரியங்களை செய்து வருவதே நாம் க்ஷேமத்தை அடைய சரியான வழியாகும். உண்மை பேசுதல், பிராணிகளிடத்து தயைத் தானம், தேவர்களின் பூஜை, தர்மச் சாஸ்த்திரங்களை படித்து அதன்படி நடப்பது பெரியோர்க ளோடு இணங்குதல், முதலிய நல்ல காரியங்களே சர்வேஸ்வர னுடைய அனுக்கிரகம் பெற வழியாகும்.

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ் வாங்கி நல்லோ ருக்கு விநியோகம் செய்யுங்கள்.

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம் முள்ளு தேன் குழல், பருப்புத் தேங்காய் வகைகள் திரட்டுப்பால், அப்பம் முதலியவை செய்து தரப்படும்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

*24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர்*

சென்னை-20 போன்: 412557

Ad-ventures

தலையைக் குனிந்தபடி கோப்பைகளை எடுத்துக் கொண்டு கூடத்துக்குச் சென்றான்.

ராசமாணிக்கமும் அப்பாவும் தீவிரப் பேச்சில் இருந்தார்கள்.

"எனக்கும் போகிற போக்கைக் கண்டு பயமாத்தான் இருக்கு, குகதாஸன்! குழப்பமாகவும் இருக்கு. இரண்டு நாட்கள் முன்பு செல்வநாயகத்தைப் பார்த்தேன்."

"யார்? தமிழ்த் தந்தை செல்வாவா?"

"ஆமாம். அவரே ரொம்பச் சோர்ந்து போய் விட்டார். நம்ம அரசியல்வாதிகளிலே அவர் ஒருத்தர்தான் தீர்க்கதரிசி. தமிழருக்கு ஆதரவான சாஸனம் அமைக்க அவரும் படாத பாடு பட்டார். இரண்டு ஒப்பந்தம் கொண்டு வந்தார். ஆனா நடைமுறையிலே அரசு எதையும் அமுலாக்க இல்லையே!"

"சிங்கள அரசுக்குப் புத்த பிக்குகளையும் சில கட்சி எதிர்ப்புக்களையும் அடக்கத் தெரியல்லே ஐயா."

"அரசியல் விளையாட்டிலே அப்படி இருக்கிறதுதான் அவர்களுக்குச் சாதகம்" என்றார் ராசமாணிக்கம், கசப்புடன். "மக்களுடைய எதிர்கால நலத்தைப் பற்றி யாருக்கு குகதாஸன் உண்மையான கவலை இருக்கு? சுதந்திரம் கிடைக்கிற நேரத்திலே நம்ம ஆள் ஜி. ஜி. பொன்னம்பலத்துக்கு நல்ல செல்வாக்கிருந்தது. அப்பவே அரசியல் சாசனத்தில் சிறுபான்மை மக்களுக்குச் சம உரிமையும் தமிழ் மொழிக்குச் சம அந்தஸ்தும் இந்தியத் தமிழர்களுக்குப் பிரஜா உரிமையும் நிச்சயப்படுத்தியிருக்கணும். பிரிட்டிஷ் அரசு ஒத்துக் கொண்டிருக்கும். ஆனா எதையும் செய்யல்லே. ஏன்? பதவி ஆசை. பெரும்பான்மை சிங்களக் கட்சியோடு சேர்ந்தால் பிரதம மந்திரி ஆகலாம் என்று!"

"அதெல்லாம் பழைய கதை ஐயா!" என்று அப்பா முணுமுணுத்தார்.

"அதிலே தப்புச் செஞ்சதாலேதானே பிறகு எதையும் நிறைவேற்ற முடியாமல் போச்சு! அதோடு தமிழ்த் தலைவர்களுக்கு நடுவிலே போட்டாப் போட்டி வேறு. அவரவரும் தங்களுடைய முக்கியத்துவத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் கவலை. அதனாலே தான் தோட்டத் தமிழருக்குப் பிரஜா உரிமை பறிக்கப்பட்டபோது ஒண்ணும் செய்ய இயலாமல் இருந்தோம்! மனுஷத்தனம் உள்ள எவனும் ஜீரணிக்க முடியாத அநியாயம் அது எண்டு எல்லாரும் உணரவேயில்லே. ஏன்னா தோட்டத் தமிழரை எண்டைக்கும் நம்மைச் சேர்ந்த ஆளுங்களா நாம நினைச்சதில்லே. கள்ளத் தோணிப் பயல்கள் எண்டு நமக்கு அலட்சியம். நம்மைவிட எண்ணிக்கையிலே அதிகமான அவங்களுக்குப் பிரஜா உரிமை போனது அரசியல் ரீதியிலே நம்மைப் பலவீனப்படுத்திவிட்டது எண்டு தெளிவான பிறகுதான் விழிப்பு வந்தது. பாராளுமன்றத்திலே தமிழர்களுக்குப் பிரதிநிதித்துவம் குறைஞ்சு போச்சு. நம்ம எதிர்ப்பு எதுக்கும் பலமில்லாம போச்சு."

சற்று நேரம் இருவரும் பேசவே இல்லை.

"நமக்குள்ளே ஜாதிப் பெருமையும் திமிரும் பேதமும் அதிகம் குகதாஸன். அதுக்குத் தண்டனையை அனுபவிக்கிறோம். முஸ்லிம் தமிழர்களுக்கும் நமக்கும் ஒட்டுதல் இல்லே. சரித்திர காலத்து ஈழத் தமிழ்ப் பெருமையைப் பேசிக் கொண்டிருக்கோம். இந்தப் பேச்சினாலே மற்ற தமிழர்களை அன்னியப் படுத்தறோம். நம்ம அரசியல்வாதிகளுக்கும் ஒன்றிரண்டு பேரைத் தவிர அரசியல் நோக்கு இல்லே. அப்படியிருக்க மக்களுக்கு எப்படிப்பட்ட அரசியல் அறிவோ ஞானமோ இருக்கும்? உணர்ச்சி வசப்படத் தான் தெரியும்!"

"செல்வநாயகத்தைப் பற்றி ஏதோ சொல்ல வந்தீரே ஐயா?"

"ஆ, ஆமாம். மனுஷன் ரொம்பத் தளர்ந்து போயிட்டார். உடல்நிலை வேறு சரியில்லே. எடுத்த காரியம் எதுவும் நடக்கல்லே. அரசுடைய பதில் எல்லாம் 'சிப்பிலி ஆட்டற' வேலையாயிருக்கு. அவரே வாயைத் திறந்து இண்டைக்கு என்ன சொன்னார் தெரியுமா?"

"என்ன ஐயா?"

"பேனாவைப் பிடிக்கிற கை துவக்கைப் பிடிக்கப் போகிற நாள் வெகு தூரத்தில் இல்லை எண்டு சொன்னார்!"

"அந்தக் கிழவரா அப்படிச் சொன்னார்?"

"ஆமாம் என்கிறேன்! சமாதானமாப் போகிற வழியே இல்லே எண்டு அவரே நினைக்க ஆரம்பிச்சிருக்கார். உண்மையாச் சொல்றேன் குகதாஸன். அவர் பேச்சைக் கேட்டுக் கொஞ்சம் அதிர்ந்துதான் போனேன். அரசுடைய பிடிவாதமும் பொடியன்களுடைய போக்கும் அவருக்கு அப்படிப்பட்ட எண்ணத்தை ஏற்படுத்தியிருக்கும். உடல்நிலை வேறு சரியில்லே. எதிர்காலத்துக்கு ஒரு பாதையைக் காண்பிக்கணும் என்று கிழவருக்குப் பயம் தோன்றி விட்டது என்று நினைக்கிறேன். வரப்போகிற இடைத் தேர்தலுக்கு நேற்று விட்டிருக்கிற அறிக்கையைப் பார்த்தீரா?"

"இல்லையே?"

"தமிழருக்குத் தனி நாடு வேணும் என்கிற அறிக்கை விட்டிருக்கிறார்கள், யாரோ தாம்பாளத்தில் வைத்துக் கொடுத்துவிடப் போகிற மாதிரி!"

"எனக்கு எதுவும் புலப்படல்லே ஐயா! கண்ணைக் கட்டிக் காட்டிலே நிற்கிறது போல் இருக்கு."

"எனக்கும் ஒண்ணும் புரியல்லே குகதாஸன். அரசினுடைய அடக்குமுறை எல்லை மீறிக் கொண்டு வருகிறது. இந்த நிலையிலே நான் ஊர் ஊராய்ப் போய் அஹிம்ஸா வாதத்தைப் போதிச்சா என்னைப் பித்தன் எண்டுதான் நம்ம பொடியன்கள் நினைக்கிறான்கள். அவர்களுக்கு நல்ல எதிர்காலத்தைக் கொடுக்க நாமும் வகையில்லாமல் உட்கார்ந்திருக்கோம். அவர்களு



**இன்ஷூரன்ஸ் ஏஜெண்ட்: உங்க கடையைப் பகல் இரண்டு மணிக்கு இன்ஷூர் செய்திருக்கீங்க. இரண்டரை மணிக்கெல்லாம் தீப்பிடிச்சு எரிஞ்சிருக்கே? என்ன காரணம்?**

**கடைக்காரர்: பையனின் சோம்பல்தான். அவன் சுறுசுறுப்பாக இருந்திருந்தால் இரண்டேகால் மணிக்கே கடை தீப்பிடிச்சு இருக்கும்!**

**— மீனம் தனுசு**

டைய நல்லெண்ணத்தைச் சம்பாதித்துக் கொள்ளணும் எண்டு அரசியல்வாதிகள் விடுக்கிற அறிக்கைகளும் உறுதி மொழிகளும் சரியான கேலிக் கூத்தாகத்தான் போகப் போகிறது!''

''பிரிவினை கோரினால் அரசு நம்ம நிலைமையைப் புரிந்து கொண்டு கொஞ்சம் சலுகைகளாவது கொடுக்கும் எண்டு எதிர்பார்க்கிறார்கள் நம்ம ஐக்கிய முன்னணிக்காரர்கள்.''

''இண்டைக்கு எழுதித் தரேன்!'' என்றார் அப்பா பதற்றத்துடன். ''அரசு இன்னும் மூர்க்கமாய்த்தான் நடந்து கொள்ளும். பிரிவினை கேட்கிறோம் என்கிற காரணத்தை வெச்சே உலக அரங்கிலே தனக்குப் பலம் சேர்க்கும். கு ள் ளி க் கு த் தீ வைக்கிற சமாசாரம்தான் இது. இந்தக் கோரிக்கை கொடுக்கிற தைரியத்தைக் கொண்டே நம்ம பொடியன்களும் ஆயுதம் கொண்டுதான் அதை நிறைவேற்ற முடியும்னு போவான்கள்!''

''ஆயுதம் ஏந்தறதிலே ஒரு கிளுகிளுப்பு இருக்கு குகதாஸன். தினம் தினம் விவரம் தெரிஞ்ச நாளிலிருந்து அரசுடைய அடாவடித்தனத்தைப் பார்த்து வருகிற பொடியன்களுக்கு அஹிம்ஸாவாதம் ஏற்குமா சொல்லுங்கள்?''

''நீங்கள் என்ன காரணம் சொன்னாலும் எனக்குச் சமாதானமாகாது ஐயா. பயங்கரப் பரிசோதனை இது. பழுத்த அரசியல்வாதிகள் தங்களாலே எதையும் சாதிக்க முடியாத ஏமாற்றத்தை இந்தப் பொடியன்களுடைய ஆயுதமேந்தலிலே மறைத்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். இது தவிர்க்க முடியாத விளைவு எண்டு சொல்லி மறைமுகமாக ஊக்கப்படுத்துகிறார்கள். இளங்கன்றுக்குப் பயமேது? துவக்கைப் பிடித்தால் வீரன் என்கிற எண்ணம். வீரம் என்கிறது பயங்கரவாதமா மாற எத்தனை தேசாலம் செல்லும்?''

அப்பாவுக்கு ஏதோ ஆவேசமே வந்து விட்டாற் போலத் தோன்றிற்று. என்னைத் தடுக்க வேண்டாம் என்பது போலப் பேசிக் கொண்டு போனார்.

''ஆயுதத்தைப் பிடிக்க ஆரம்பிச்ச பிறகு அதைக் கீழே வைக்க இயலுமா ஐயா? ஏற்கெனவே எதேச்சாதிகாரமா நடக்கிற போலீஸ் இப்ப சும்மா இருக்குமா? இண்டைக்கு அந்தப் பொடியன் தப்பிக்க இயலாமெதானே செத்துப் போனான். நாளைக்கு அவனுடைய சகாக்களைப் போலீஸ் கொண்டு போய்ச் சாகடிக்கும்.''

அப்பாவின் குரல் தழுதழுத்துப் போயிற்று.

''நமக்கு வேறு மார்க்கம் தெரிய இல்லே. நம்ம குழந்தைகளைப் பகடைக் காய்களா உருட்டி வேடிக்கை பார்க்கிறோம்!''

திடீரென்று அப்பா உடைந்து போனவராய் விசும்பினார்.

ஜயசீலனுக்குத் திக்கென்றது. மெல்ல எட்டிப் பார்த்தான்.

ராசமாணிக்கம் நாற்காலியிலிருந்து எழுந்துவந்து அப்பாவின் தோளைத் தட்டினார்.

''எண்ட மகனுக்காக நான் அழ இல்லே ஐயா!''

''எனக்கு அது புரிகிறது குகதாஸன். நமக்கெல்லாம் இது ஒரு மோசமான காலம் தான்...''

ராசமாணிக்கம் கிளம்புவதைக் கண்டு ஜயசீலன் வாசலுக்கு வந்தான்.

அவர் அவனைச் சில விநாடிகள் பார்த்து நீண்ட பெருமூச்சு விட்டார்.

''உன் அப்பாவுக்குத் துணையா நீதான் இருக்கணும் ஜயசீலன்.''

அவன் பதிலை எதிர்பாராதவர் போல் அவர் கிளம்பிச் சென்றார். உள்ளே அப்பா பெரிய சோகத்தில் இருந்தார்.

தேவநேசன் வீட்டுப் பக்கம் வரவேயில்லை. அவனைப் பற்றிக் கவலைப்பட கிட்டத்தட்டப் பழகிவிட்ட நிலையில் ஒருநாள் திமுதிமுவென்று ஜஸ்டின் ஓடிவந்து செய்தி சொன்னான்.

''புன்னாலையிலிருக்கிற வரதராஜ பெருமாள் கோவில் வாசலில் மேயர் துரையப்பாவைச் சுட்டுக் கொன்றுவிட்டார்கள். வெள்ளிக்கிழமை அங்கே வருவார் எண்டு தெரிஞ்சு பொடியன்கள் நாலு பேர் காத்திருந்து அவர் வந்ததும், 'மணி என்ன?' என்று கேட்டிருக்கான் ஒருத்தன். மணி சொல்லக் கையைத் தூக்கி மணிக்கூட்டைப் பார்க்கையில் துவக்கால் வசையாச் சுட்டுட்டான்!''

ஜஸ்டினின் குரலில் கெக்கலிப்பு தொனித்தது.

''பொடியன்கள் துரையப்பாவின் காரிலேயே தப்பிச்சு ஓடிட்டான்கள்!''

மறுநாள் போலீஸ் நூறு யாழ்ப்பாணப் பொடியன்களைக் கைது செய்தது — ஜஸ்டின் உட்பட.

(தொடரும்)

# முன்னேற்றப் பாதையில் மேலும் 3 புதிய கிளைகள்



நாட்டின் மிகப் பெரிய சீட்டு நிறுவனமான

## ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

### விஜயதசமி (2-10-1987) அன்று மதுரை, திருச்சி கோயம்புத்தூர் நகரங்களில் புதிய கிளைகளைத் திறக்கிறது

- 1974-ம் ஆண்டு முதல் மக்களின் நம்பிக்கையையும், நல்லெண்ணத்தையும் பெற்றுள்ள நாணயம் மிகுந்த நிறுவனம் ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிட்.
- 70,000க்கும் அதிகமான சீட்டு அங்கத்தினர்களை உடையது.
- மாதம் ஒன்றிற்கு ரூ. 3/- கோடிக்கும் அதிகமாக சீட்டு அங்கத்தினர்களுக்குப் பட்டுவாடா செய்யப்படுகின்றது.
- வங்கிகளிலும், நிதி நிறுவனங்களிலும் மற்றும் வர்த்தகத் துறைகளிலும் பல ஆண்டுகள் அனுபவம் பெற்றுள்ளவர்களால் நடத்தப்படுவது.
- **வழக்கம் போல இந்த ஆண்டும் விஜயதசமி அன்று புதிய சீட்டு குரூப்புகள் துவக்கப் படுகின்றன.**

**இலவசப் பரிசுகள் ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸின் எல்லா கிளைகளிலும், அலுவலகங்களிலும் கிடைக்கும்.**

**அன்புடன் அழைக்கிறோம்! வாருங்கள்!!**




## ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 123, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை - 600 001. போன்: 21401 / 21402

கிளைகள்: சென்னை: அடையார், அண்ணாநகர், மவுண்ட் ரோடு, மயிலாப்பூர் – 165, கச்சேரி ரோடு. தி. நகர் – 78, தெற்கு உஸ்மான் ரோடு.

மதுரை : 270 மேலமாசி வீதி, மதுரை-1

திருச்சி : 'ஜெரோம் காம்ப்ளக்ஸ்' 9 கோட்டை ஸ்டேஷன் ரோடு திருச்சி - 2

கோவை : 'ராஜ் காம்ப்ளக்ஸ்' முதல் மாடி 127 ராஜாஜி சாலை ராம் நகர் கோயம்புத்தூர் - 9.

பெங்களூர்: 142, கே.எச். ரோடு, போன்: 223637. 49 மல்லேஸ்வரம் சர்க்கிள்

மைசூர் : 645, சாமராஜா டபிள் ரோடு, போன்: 34766.

நெல்லூர் : 3/9, ஸ்டோன் ஹவுஸ்பேட், போன்: 6210.

Efficient/1102/SCF/87

தந்தி: பல்கோ சில்க் போன்: 2634

பார் புகழும் சிறப்பு — காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளுக்கு
பார்த்து வாங்கிட — வாருங்கள் — பல்லவர் பட்டு கூட்டுறவு சங்கத்துக்கு

# காஞ்சிபுரம் பல்லவர் பட்டு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி & விற்பனைச் சங்கம் லிட்

நெ. சே. பி. (ஸ்பெஷல்) 83

429 — பி, 430, காந்தி ரோடு — காஞ்சிபுரம் — 631 501.

கிளைகள்:

1. ஸ்ரீ சில்க்ஸ்
   2, நியூ காம்ப்ளெக்ஸ், ஆர். சி. பில்டிங்ஸ், சிக்பெட், பெங்களூர் — 53.
2. காவேரி ஸில்க்ஸ்
   15 — 3 — 418 — மெயின் ரோடு, ஹிந்துபூர் (ஆந்திரா).
3. காஞ்சி கோ — ஆப் ஸில்க்ஸ்
   உம்மிடியார் ஷாப்பிங் சென்டர், மவுண்ட் ரோட், சென்னை — 2.
4. ராமரத்னா ஸில்க்ஸ்
   241 — 2 வது அக்ரஹாரம், சேலம் — 1.
5. ஸ்ரீ மாருதி ஸில்க்ஸ்
   13/396, சிவாலயம் தெரு, புரொடட்டூர், கடப்பா ஜில்லா (ஆந்திரா).
6. வி. எஸ். சந்திரசேகரன் & கோ.,
   139, கீழ வெளி வீதி, மதுரை — 1.
7. ஸ்ரீ வாஸவி ஸில்க்ஸ்
   15/204 — ஏ, வைஸ்யா ஹாஸ்டல் ரோடு, நியூ டவுன், அனந்தபூர்.
8. தேவி ஸில்க்ஸ்
   19, திருவேங்கடசாமி செட்டி தெரு, ஈரோடு — 1.

திரு. ஈ. நடனம்,
துணை இயக்குனர்/செயலர்.

திரு. கோ. நடராஜன்
தலைவர் (பொறுப்பு)

நிர்வாகஸ்தர்கள்:
வி. எம். சந்திரபானு, எஸ். துரைசாமி, அ. வைத்தியலிங்கம்
எஸ். வி. சுப்புராமன்

# ஒரு மில் திறக்கப்படுகிறது!



'டி. ஐ. எம். ஏ.

'டைனமிக் இண்டியா மில்ஸ் அஸோசியேஷ'னின் சுருக்கெழுத்துக்களைத் தாங்கி நின்ற அந்த ஐந்து மாடிக் கட்டடம் நெடிதுயர்ந்து நின்றது. அதன் முன்புற கேட் வழியே 'சர்ர்...'ரென்று சீறிப் பாய்ந்து வந்த 'டயோட்டா' ஒன்று சிமெண்ட் தரையினால் பதிக்கப்பட்ட கட்டட முகப்பில் அரை வட்டமடித்து நின்றது.

சக தொழிலதிபர்களினால் ஜி. பி. என்று செல்லமாகவும் முதலாளி சாபா என்று தமது ஊழியர்களினாலும் வர்ணிக்கப்படும் தொழிலதிபர் கா. பார்த்திபன், காரின் கறுப்புக் கண்ணாடியைக் கீழே இறக்கிவிட்டுக்

**கா. சு. வேலாயுதன்**

காரை விட்டுக் கீழிறங்காமல் கட்டட முகப்பைப் பார்த்தார். தம் தந்தை காளிதாஸ் இறந்த பின்பு முதன் முதலில் தொழிலாளர் தலைவர்களுடன் பேசப் போகிறோம் என்ற படபடப்பு ஒரு துளியும் இல்லாது அலட்சியமாக உருண்டோடியது அவரின் பார்வை.

''நம்பாதே... நம்பாதே... காபாவை நம்பாதே...!''

''ஆளும் வர்க்கமே... ஆலையைப் பூட்டித் தொழிலாளர்களைப் பட்டினி போடாதே.''

''மூடிய பஞ்சாலையை உடனே திற..., இல்லையேல் சாகும் வரை உண்ணாவிரதம்!'' — அந்தக் கட்டடத்திற்கு வெளியே பலவிதமான கூச்சல்கள் தொழிலாளர்கள் அங்கே குழுமியிருப்பதை உணர்த்தியது.

''சார்...'' — உள்ளிருந்து அரக்கப் பறக்க ஓடிவந்த அவரின் பி. ஏ. வரதப்பன் அவரை நோக்கிப் பதற்றத்துடன் கும்பிட்டபடி காரின் கதவைத் திறந்து விட்டார். இறங்கிய ஜி. பி. தம் கையிலிருந்த ஃபாரின் சூட்கேஸை பி. ஏ. வின் கைக்கு மாற்றி விட்டு நடந்தார்.

''என்னங்க மிஸ்டர் வரது... ஒவ்வொரு பார்ட்டி லீடர்ஸும் மீட்டிங்குக்கு வந்துட்டாங்களா?''

— அமைதியாகச் சொற்களை உதிர்த்தபடி அவர் நடக்க, தம் உடலைக் கேள்விக் குறி போல் குறுக்கிக் கொண்டு, பருத்த தொப்பை அடங்கிய சரீரத்தைத் தூக்க முடியாமல் தூக்கியபடி அவர் பின்னால் ஓடிய வரதப்பன் —

''ஓ... எல்லோரும் அரை மணி முன்னதாகவே வந்துட்டாங்க சார். அத்தனை பேரும் மீட்டிங் ஹால்ல தான் இருக்காங்க..!''

பி. ஏ. வரதப்பனுக்கு மூச்சிரைத்தது. என்ன இருந்தாலும் ஒரு நாற்பத்தெட்டு ஒரு முப்பத்தைந்துடன் ஓட முடியுமா?

''ஆமாம்... எதுக்காக லேபரர்ஸ் அத்தனை பேரும் ரோட்ல கூச்சல் போட்டுக்கிட்டு இருக்காங்க?''

''அது... அது. அவங்க ஃபார்மாலிட்டி சார்... எப்போ நம்ம மில் பிரச்னையைப் பேசினாலும் இப்படிக் கோஷம் போடறதை வழக்கமா வெச்சிருக்காங்க...!''

''கூச்சல் போடறதுனாலேயும், உண்ணாவிரதம் இருக்கிறதனாலேயும் மட்டும் அவங்க பிரச்னை தீர்ந்துடுமா என்ன...?''

''......'' — பி. ஏ. தலையைச் சொறிந்தார்.

''என்ன வழக்கமோ, என்னவோ...?''

சலித்துக் கொண்ட ஜி. பி. தம் கண்ணை மறைத்திருந்த கூலிங்கிளாஸைக் கழற்றித் தம் கறுப்புக் கோட்டில் செருகிக் கொண்டு அந்தக் கட்டடத்தில் தமக்கென்று ஒதுக்கியிருந்த அறைக்குள் நுழைந்து, சுழல் நாற்காலியில் வேகமாக அமர்ந்து தம்மைத் தாமே ஒரு முறை சுற்றிக் கொண்டார்.

''மிஸ்டர் வரது.. அவங்க லேபரர்ஸ் தரப்புல என்ன முடிவு செஞ்சிருக்காங்கன்னு விசாரிச்சீங்களா?''

"நல்லா விசாரிச்சுட்டேன் சார்... ரெண்டு வருஷங்களுக்கு முந்தி பெரிய ஐயா இருந்தப்ப நம்ப மில்லே ஐம்பது லட்ச ரூபாய் நஷ்டம் காட்டி 'லாக் அவுட்' பண்ணினப்ப தொழிலாளிகளுக்கு மூணு மாசச் சம்பளமும், ஒரு வருஷத்துக்கான குறைந்த பட்ச போனஸூம் பாக்கி வெச்சிருந்தோம்ங்க... அதையெல்லாம் ஒரு ரூபா பாக்கியில்லாம தொழிலாளிகளுக்குக் கொடுத்தாத்தான் மூடிக் கிடக்கிற மில்லைத் திறக்க விடுவோம்னு 'லேபர் லீடர்ஸ்' உறுதியாச் சொல்றாங்க..."

"அப்படியா...?"

"ஆமாங்க... நீங்க மில்லே எப்படியாவது நஷ்டத்தைச் சரிக்கட்டி ஓட்டியாகணும்னு ஆசைப்படறீங்க... தொழிலாளிங்க அத்தனை பேரும் அதையே விரும்பறாங்க!"

"விரும்பி என்ன பிரயோஜனம்? நாம் சொல்ற திட்டத்துக்குத்தான் தலைவர்கள் யாரும் ஒத்து வர மாட்டாங்கன்னு நீங்களே சொல்றீங்களே?"

"நீங்க சொல்ற மாதிரி கொடுக்க வேண்டியதிலே பாதிப் பணத்தை வாங்கிக்கிட்டு வேலை செய்ய லீடர்ஸூம் ஒத்து வருவாங்க. லேபரர்ஸையும் அவங்களே ஒண்ணுகூடி ஒத்துக்க வைப்பாங்க. ஆனா நம்ம மில் லேபர் யூனியனோட பெரிய தலைவர்கள் ரெண்டு பேருக்கும் ஒவ்வொரு இலட்சமும், குட்டித் தலைவர்கள் பத்துப் பேருக்கும் ஒவ்வொரு பத்தாயிரமுமாகத் தள்ளினால் காரியம் கனகச்சிதமாக நடக்கும்... என்ன ஒரு மூணு இலட்ச ரூபாய்தானே. போனால் போகட்டும்னு நினைச்சா முப்பது. முப்பத்தைந்து இலட்சத்தை மூணு நாலு வருஷங்களுக்கு முடக்கிடலாம்...!"

— வரதப்பன் சொல்லச் சொல்ல ஜி.பி.யின் முகம் கறுத்தது.

"இந்தத் தலைவருங்க இவ்வளவு எதிர்பார்க்கிறாங்கன்னு உங்களுக்கு உறுதியாத் தெரியுமா...?"

"உங்கக் காதுக்குப் போகட்டும்னு எங்கிட்டேதானுங்க இந்த விஷயங்களைச் சொன்னாங்க...!"

"ம்... அப்படியா! இவங்களுக்கு இதைக் கொடுத்தா, தொழிலாளிங்க பகுதிச் சம்பளத்தை வாங்கச் சம்மதிப்பார்களா?"

"கண்டிப்பாச் சம்மதிப்பாங்க. லீடர்ஸ் அவங்ககிட்டே பக்குவமாப் பேசிச் சம்மதிக்க வெச்சுடுவாங்க...!"

ஜி. பி. எழுந்து நடந்தார். பி. ஏ. வரதப்பன் அவர் பின்னாலேயே ஓடினார்.

மீட்டிங் ஹாலுக்குள் நுழைந்தவுடன் வட்டமாகப் போடப்பட்டிருந்த மேஜையைச் சுற்றிலும் இருந்த பத்துப் பன்னிரண்டு 'தலைவர்'களும் எழுந்து நின்று வாயெல்லாம் பல்லாகக் கைகளை ஒரே சமயத்தில் குவித்தனர். ஜி. பி. பதிலுக்குத் தலையை மட்டும் அசைத்துக் கொண்டு, நடுநாயகமாகப் போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தார் பி. ஏ. வரதப்பன் ஒவ்வொரு தலைவரிடமும் தனித்தனியே மில் நிர்வாக வரவு



## அருள்வாக்கு

ஒரு மாடு கண்ணாடியில் தன்னைப் பார்த்துவிட்டு இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதை முட்டப் போகிறது. ஒரு மனிதன் தன் பிரதி பிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா? இரண்டும் ஒரே பொருள் என்பது அவனுக்குத் தெரிந்து சாந்தமாக இருக்கிறான். இப்படியாக நாம் பார்க்கின்ற அனைத்துமே ஒன்றுதான். இரண்டாவது என்று எண்ணினால் ஆசை வரும். ஆசை வருவதனால் கோபம் வருகிறது. கோபம் வருவதனால் பாபங்களைச் செய்கிறோம். அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால் வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை; கோபம் இல்லை; பாபம் இல்லை; காரியம் இல்லை; ஜனனம் இல்லை; துன்பமும் இல்லை.

இந்த ஞானத்தை எப்படிப் பெறுவது? நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப் பால்கொடுப்பவள் அம்பாள்தான். ஞான ஸ்வரூபமே அவள்தான். அவளுடைய சரணாரவிந்தத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைத்தாலே ஞானம் வரும்; மனிதன் அப்போது தெய்வமாவான்.

முதலில் மனிதனை மிருகமாக இல்லாமல் மனிதனாக ஆக்க வேண்டும். அப்புறம் அவனைத் தெய்வமாகவே உயர்த்தி விட வேண்டும். இந்தக் குறிக்கோளுடன்தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன. சித்தாந்தம், தத்துவங்களில் அவற்றுக்குள் எத்தனை பேதமிருந்தாலும், இப்போதிருக்கிற மாதிரி மனுஷ்யனை ஒரே காமக்குரோதாதிகளுடன் இருக்க விடக் கூடாது; இவனை நல்லவனாக ஆக்கி, அன்பு, அடக்கம், சாந்தம் தியாகம் முதலிய குணங்கள் உள்ளவனாகப் பண்ண வேண்டும் என்பதில் எல்லா மதங்களும் ஒரே குரலில்தான் பேசுகின்றன.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

செலவுக் கணக்கை அறிக்கை வடிவில் கொடுத்தார்.

ஃபேன்கள் ஓடும் சப்தமும், ஃபைல்களை யும் அறிக்கைகளையும் புரட்டும் சலசலப்பும் தலைவர்கள் ஒருவருக்கொருவர் முணுமுணுக் கும் ஒலியுமே அந்த நீண்ட ஹாலில் சன்ன மாகத் தவழ்ந்து கொண்டிருந்தன! சிறிது நேரச் சலசலப்புக்குப் பின் ஜி. பி. தொண்டையைச் செருமிக் கொண்டு பேச ஆரம்பித்தார்.

"நம்ம மில் ரெண்டு வருஷத்துக்கு முன் னலே எதனல் 'லாக் அவுட்' ஆச்சுன்னு உங்களுக்கு நல்லாத் தெரியும். இதை நடத் தவே முடியாது. அந்த அளவுக்கு இது நலிஞ்சுபோய்க் கிடக்குதுன்னு என் அப் பாவே கைவிட்டுட்டார். இப்ப அவர் போன பின்னலே எப்படியாவது மில்லை ஓட்டிட ணும்னு எனக்குள்ளே ஒரு வெறி ஏற்பட் டுடுச்சு. நான் மில்லைப் பழையபடி சகஜ நிலைக்குத் திரும்பவும் ஓட்டறதுக்கு உங்களோட முழு ஒத்துழைப்பையும் கேட்கி றேன்...

"இப்ப நம்ப மில் இருக்கிற நிலைமையிலே பஞ்சு வாங்கிப் போட்டு அதை ரிப்பேர் செஞ்சு பராமரிச்சு நடத்தறதுக்கே குறைந்த பட்சம் ஐம்பது லட்ச ரூபாயாவது தேவைப்படும். இந்தப் பணத் தேவைகளை பேங்க் லோன் வாங்கியும், சில பெரிய மில் அதிபர்கள்கிட்டே கடன் வாங்கியும் சரிக் கட்டிடலாம்னு முடிவு செஞ்சிருக்கேன். தொழிலாளிங்க எல்லோருக்கும் நிர்வாகம் தர வேண்டிய பணத்துல மூணுல ஒரு பங்கை இப்பத் தந்துடறேன். மற்றபடி மாதா மாதம் சம்பளத்தையும் நிறுத்தாம தந்துட றேன். அப்புறம், மீதி தர வேண்டிய பணத்தை ரெண்டு மூணு வருஷங்கள்ல திருப்பித் தந்துட முயற்சி செய்யறேன்!"

ஒரு துளியும் பிசகாமல் பேசினர் ஜி.பி.

தொழிலாளர் தலைவர்களுக்குள் சில நிமிட நேரம் கசமுசப்பு எழுந்தது. பின்பு மூத்த தலைவர் ஒருவர் எழுந்தார்.

"ஜி. எம். கோவிச்சுக்கக் கூடாது... மில் 'லாக் அவுட்' ஆனப்ப நஷ்டத்துல ஓடிச்சா லாபத்துல ஓடிச்சான்னு எங்களுக்கு நல் லாவே தெரியும். உங்க அப்பா ஸ்விஸ் பேங்க்ல எத்தனை கோடி ரூபா கறுப்புப் பணம் வெச்சிருந்தார்ன்னும் எங்களுக்குத் தெரியும்..." என்று கூறி நிறுத்திவிட்டுத் தம் இமைகளை எதிரே உட்கார்ந்திருந்த ஒரு தலைவரை நோக்கிச் சிமிட்டிக் கொண்டு தொடர்ந்தார்.

"அதனலே... நாங்க, நம்ம பிரச்னையை, அதாவது லீடர்ஸுக்கும் முதலாளிக்கும் இருக்கிற பிரச்னையைப் பேசித் தீர்த்துடத் தான் காத்துக்கிட்டிருக்கோம்... அதை முடிவு செஞ்சுட்டீங்கன்னு தொழிலாளி களை வேலை செய்யச் சம்மதிக்க வைக்கி ரோம்...!

"பழைய ஜி. எம்.... அதான் உங்க அப்பா கூட இந்தப் பிரச்னையினலேதான்

# படச் சிரிப்பு

● கணவன்: இராத் தூக்கம் பகல் தூக் கம் இல்லாமல் பாடுபட்டுக் கொண் டாந்தேன். இப்படி வாரி இறைக்கி றுளே?

— ஏ. சம்பூர்ணம், சீர்காழி.



● தீயணைப்புப் படை வீரர்: ஏம்மா முன்னே பின்னே தண்ணீரிலே குளிச்சதில்லியா? சீக்கிரம் முடிம்மா...

— ஜி. எல். ராஜேந்திரன், திருச்சி — 8.





● — நூர். மதுரை — 10.

(ஒவ்வொரு ஜோக்கும் ரூ. 250/— பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றது.)

● பையன்: வைகை... காவேரி சங்கமம் இங்குதான்!

கடைக்காரர்: தள்ளிப் போய்ப் பாடுடா! எந்தக் கடைக்கு முன்பு என்ன பாட்டுப் பாடறுன் பாரு!

— வி. பிரகாஷ். சென்னை — 33.



● "தூங்கினுல் கீழே விழுந்துடுவோமோங்கிற பயத்துல இப்பத்தான் சார் எல்லாரும் தூங்காமல் வேலே பார்க்கிறுங்க!"

— சரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா, திருத்துறைப்பூண்டி.



● மனேவி: "குடும்பத்தோடு வந்து ஒரு வாரம் தங்க இருக்கிரேம்'னு முன் கூட்டியே கடிதம் எழுத வேண்டாம்னு சொன்னேனே, கேட்டீங்களா...?"

— மதுரை ஜோ. மதுரை —20.



● "ரொம்ப 'சீரியஸான' ரோல் கேட்டீங்களே! இப்பத் திருப்திதானே..?"

— சரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா திருத்துறைப்பூண்டி.





● நண்பர்: "என்ன சார் இப்படி! எங்கே யிருந்து இப்படி வர்றீங்க?"

கோவணம் கட்டியவர்: "என் பையனே 'நர்சரி' ஸ்கூல்ல சேர்த்திட்டு வர்றேன்...!"

— விருதை ராஜா. விருதுநகர் —1.

''நடக்காதுன்னு நினைச்சேன். நடந்துடுச்சு.''

''அப்படி என்ன நடக்கக் கூடாதது நடந்துடுச்சுன்னு வருத்தமா இருக்கீங்க?''

''நடந்து முடிஞ்ச நம்ம கல்யாணம் தான்!''

— மீனம் தனுசு



மில்லை மூட வேண்டிய நிலைமையை உருவாக்கிட்டாரு. அவர் அஞ்சு லட்சத்தை எங்க பத்துப் பேருக்குமாக் கொடுக்கறேன்னார். ஐம்பது லட்ச ரூபாயை மூடக்கறதுக்கு வெறும் அஞ்சு லட்சமான்னு உதறி யெறிஞ்சுட்டோம்...!''

— இப்படி அந்தத் தலைவர் பேசி முடித்த போது, அனைவரும் வித்தியாசமாகச் சிரித்தனர். ஜி. எம்., ஜி. பி. எழுந்தார். சர்வ அலட்சியமாய்ச் சகலரையும் நோக்கினார்.

''இதோ பாருங்கய்யா.... என்னோட ஸ்பீடு என்னன்னு யாருக்கும் தெரியாது. ம்... இப்பச் சொல்றேன் கேட்டுக்குங்க... என்னாலெ ஒரு சல்லிக்காசு கூட உங்களுக்குக் கொடுக்க முடியாது. என்ன பண்ணுவீங்களோ பண்ணுங்க...!''

''புது ஜி. எம். இப்படிச் சடால்னு கோபிச்சுக்கக் கூடாது. உங்க அப்பா நம்ம மில்லில சம்பாதிச்ச எத்தனை கோடி ரூபாய்களை ஸ்விஸ் பேங்க்ல போட்டு வெச்சிருக்கார்... அதுலே ஒரு தூசியைத் தட்டினா எங்களையும் ஒட்டிடலாம். மில்லையும் ஒட்டலாம்.''

— பெரிய தலைவர் கிண்டலாகக் கூறச் சிரித்தார் ஜி. பி.

''இதோ பாருங்கய்யா... முதல்லே மரியாதையாய்ப் பேசக் கத்துக்குங்க... ஸ்விஸ் பேங்க்ல எங்கப்பா பணம் வெச்சிருந்தாரு... நீங்களே சொல்லிட்டீங்க... அது உண்மைதான். யாரு இல்லேன்னாங்க? அந்தப் பணத்துல ஒரு பகுதியை எடுத்து வந்து தொழிலாளிகளுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துட்டு உங்களுக்கு ஒரு சல்லிக்காசு கூடக் கொடுக்காமல் மில்லை ஓட்டிக் காட்டறேன் பாருங்க...!''

— சப்தத்துடன் கூறியவர் எழுந்து கொண்டார்.

தலைவர்கள் அதிர்ந்தனர்.

பிள்ளை அப்பாவை விட மோசமாக இருக்கிறானே. அவரிடம் ஐம்பது கேட்டால் ஓர் இருபத்தைந்தாவது தள்ளிவிட்டுக் காரியம் சாதிப்பார். இவன் என்னடாவென்றால் நமக்கும் எதுவும் தராமல் தொழிலாளர்களையும் திசை திருப்பி விடுவான் போலிருக்கிறதே? அப்புறம் தொழிற்சங்கத் தலைவர்களான நமக்கென்ன வேலை...?

— என்று அனைவரும் ஒரே சமயத்தில் யோசித்திருப்பார்கள் போலும்...!

சட்டென்று ஜி. பி. யைச் சூழ்ந்து அவர் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர்.

''ஜி. எம். சார்... பெரிய மனசு பண்ணி எங்களை மன்னிச்சிடுங்க... நீங்க எங்களுக்குக் கொடுக்க இஷ்டப்பட்டதைக் கொடுங்க. நீங்க சொன்னபடி தொழிலாளிகளை வேலை செய்யச் சொல்லிச் சம்மதிக்க வைக்கிறோம்...!''

— தங்களது ரேட்டில் ஒரேயடியாகக் கீழே இறங்கி வந்து கெஞ்சாத குறையாகக் கேட்டனர்.

''அதெல்லாம் முடியாது... கொடுக்கறதை வாங்கிட்டுப் போய்க் காரியத்தை சாதியுங்க... இல்லேன்னா என்னோட வழியில என்னை விட்டுடுங்க!''

— என்று கூறிவிட்டு பி. ஏ. பக்கம் திரும்பினார். அவரது பார்வையின் பொருளை உணர்ந்து கொண்டு வரதப்பன் நீட்டிய சூட்கேஸைத் திறந்து அதிலிருந்து, ஐம்பது இருபது ரூபாய்க் கட்டுக்களாக எடுத்து ஒவ்வொருவரிடமும் ஒவ்வொன்றாக வீச அதைப் பருத்த உடல் குலுங்க அவசரமாக அனைவரும் எடுத்துக் கொண்டனர்.

வீசிய வேகத்தில் ஜி. பி. நிற்காமல் நடக்க, அவருடன் ஓடிய பி. ஏ. வரதப்பன், ''சார்... அஞ்சு லட்சம் எதிர்பார்த்தவங்களைப் பேச்சில மடக்கி வெறும் அம்பதினாயிரத்துல அமுக்கிட்டீங்களே. ஆச்சரியம் தான் சார்!''

— என்று வரதப்பன் கூறியதைக் கேட்டுச் சிரித்தவாறே டயோட்டாவின் முன்புறக் கதவைத் திறந்தார். பல நூறு தொழிலாளர்களின் வாயில் மண்ணைப் போட்ட அந்தத் தொழிற்சங்கத் தலைவர்கள் ஹாலில் நின்று கொண்டு ஜி. பி. வீசிய பண நோட்டுக்களை மும்முரமாக எண்ணுவதில் ஈடுபட்டுக் கொண்டிருக்க...

''தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக... தொழிலாளர் உழைப்பைத் தங்கள் உழைப்பாக நினைத்துப் பேச்சு வார்த்தையில் ஈடுபட்டு வெற்றி காணும் எங்கள் பிரதிநிதிகள் வாழ்க... வாழ்க...''

— தொழிலாளர்களின் கோஷம் வெளியே விண்ணை எட்டிக் கொண்டிருந்தது!

# +கண்டிஷனர்.

# அனைத்திலும் சிறந்த ஷாம்ப்பூ+கண்டிஷனர்.

## இது, ஏன் ஏனைய ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனரை விட சிறந்தது என்பதற்கு அழகான 4 காரணங்கள்

**1 எல்லா வகை கேசத்திற்கும் உகந்தது.**

கேசம் 4 வகை. சாதாரண கேசம், உலர்ந்த கேசம், எண்ணெய்ப் பசையுள்ள கேசம், போஷாக்கற்ற கேசம். லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மட்டுமே எல்லா வகைக் கேசத்திற்கும் 4 வகைகளிலே கிடைக்கிறது.

மேலும், லக்மே மட்டுமே எக் ஷாம்ப்பூ + கண்டிஷனரை வழங்குகிறது.

**2 சரிவிகிதமான கண்டிஷனர்.**

அதிக அளவு கண்டிஷனர் இருக்குமானால், பலமுறை பயன்படுத்தியதும், கேசத்திலே கண்டிஷனர் தங்கிவிடுகிறது. இதனால் கேசம் கனமாக, எண்ணெய்ப் பிசுக்குப் படியாமல் போகிறது.

லக்மே ஷாம்ப்பூ மட்டுமே சரிவிகித கண்டிஷனர் கொண்டது. ஷாம்ப்பூ செய்யச் செய்ய, இது உங்கள் கேசத்தை மிருதுவாகவும், பட்டுப்போலவும், படிந்தும் இருக்கச் செய்கிறது.

**3 உங்கள் கேசத்திற்கு இதமான ஷாம்ப்பூ.**

கடுமையான ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனர், உங்கள் கேசம் மற்றும் மண்டை மேல் தோலிலுள்ள இயற்கையான எண்ணெய்களைக் கழுவிக் களைந்து, கேசத்தை உலரச்செய்து, சொரசொரப்பாகச் செய்கிறது.

லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மட்டுமே ஒவ்வொரு வகை கேசத்திற்கும் ஏற்றவாறு, மாறுபட்ட அளவு, இதமாகச் சுத்தமாக்கும் பொருள்களடங்கி வருகிறது. இவை உங்கள் கேசத்தின் இயற்கையான எண்ணெய்களை விடுத்து, அழுக்கையும் பிசுபிசுப்பையும் கழுவிக் களைகின்றன.

**4 பணத்திற்கு முழு மதிப்பு.**

ஏனைய ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனர்கள், லக்மேயை விட 20% வரை விலை அதிகம்.

லட்சக் கணக்கான மகளிர் கண்டுணர்ந்துள்ளனர் —உண்மையிலேயே லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மிகச் சிறந்தது என்று.

நீங்கள்?




## லக்மே

**இந்தியாவின் நெ.1 ஷாம்ப்பூ+கண்டிஷனர். 7 ஆண்டுகளாக.**

Enterprise/LL/145 Tm A



ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV

ராஜ்மோகன் காந்தி

# நேருவின் கௌரவத்துக்கு அடி!

# 7

காங்கிரஸ் நாடாளுமன்றக் கட்சிக் கூட்டம் நடப்பதற்குச் சில தினங்கள் முன்னதாக நேரு, ஸி. ஆரிடம், அவரே ஜனாதிபதியாகவும் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தார். "உங்களைப் போன்ற ஒருவர் இங்கிருப்பது அத்தியாவசியமானது" என்று சொன்னார் நேரு. ஆனால் கட்சியில் தமக்கெதிராக உள்ள உணர்வுகளைப் புரிந்து கொண்டிருந்த ஸி. ஆர்., "நான் இந்தச் சூழலிலிருந்து விடுபடுவதையே விரும்புகிறேன்" என்று பதிலளித்தார். ஸி. ஆருக்கு நாட்டின் முதல் பிரஜை என்ற பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஆசை இருக்கவில்லை. ஜூன் மாதத்திலேயே அவர் பட்டேலிடம், "கவர்னர் ஜெனரலாவது? ஜனாதிபதியாவது? யாருக்கு வேண்டும் இதெல்லாம்?" என்ற ரீதியில் பேசியிருந்தார். ஆனால் நேரு, ஜனாதிபதியாக ஸி. ஆர். நீடிப்பது இன்றியமையாதது என்று கருதினார். காங்கிரஸ்காரர்கள் தம் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பார்கள் என்றே நம்பவும் செய்தார் — காங்கிரஸ் நாடாளுமன்றக் கட்சிக் கூட்டம் நடக்கும் வரை!

ராஜினாமா செய்வதாக நேரு மறுபடியும் பயமுறுத்தவில்லை என்றாலும் அவர் நம்பிக்கை இழக்கவும் இல்லை. அமெரிக்காவிலிருந்து திரும்பியதும் பிரசாத்திடம் பேசினார். தாம் சீக்கிரமே அமைக்கவிருக்கும் திட்டக் கமிஷனின் தலைமைப் பதவியைப் பிரசாத்துக்கு அளிப்பதாகக் கூறினார். இதற்கு ராஜன் பாபு மசியவில்லை என்று தெரிந்த போதிலும் அவருக்கு மீண்டும் ஒரு கடிதம் எழுதினார் நேரு. அதில், காங்கிரஸ் கட்சி வேகமாகப் பிளவுபட்டுக் கொண்டு வருகிறது என்றும் காந்திஜி உருவாக்கிய உன்னதமான கட்டடத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு ராஜன் பாபுவுக்கும் தமக்கும், ராஜாஜி, மௌலானா, வல்லபாய் ஆகியோருக்கும் இருப்பதாகவும் சொன்னார். பிரசாத் காங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவியை ஏற்க வேண்டும் என்றும் அக்கடிதத்தில் கோடி காட்டினார். கடைசியாக அவர் எழுதினார்:

"குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படத் தகுதி பெற்றவர்கள் இருவரே என்பது தெளிவு. நீங்களும் ராஜாஜியும். வேறு யாருமே இல்லை. இந்த இருவரில் ஒருவர், தாம் போட்டியிடப் போவதில்லை என்று தாமாகவே முன்வந்து அறிவிப்பது நலம் என்று எண்ணுகிறேன். ராஜாஜி, ஓய்வு பெற்றுத் தமது சொந்த ஊருக்குத் திரும்புவதில் ஆர்வமாயிருக்கிறார். ஆனால் தமது சகாக்கள் வேறு ஏதாவது கடமைகளைத் தம்மிடம் எதிர்பார்க்கிறார்களோ என்ற கரிசனம்தான் அவரை யோசிக்கச் செய்கிறது. தமது சகாக்கள் தம்மை விடுவித்தால், தாம் ஓய்வு பெறுவதாக மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர் அறிக்கை வெளியிடுவார்."

இதற்கிடையில், 'பிரசாத் தான் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்' என்று பட்டேல் தீர்மானித்து விட்டார். இதற்கு, ராஜாஜியை விட பிரசாத்தே அப்பதவிக்கு ஏற்றவர் என்று பட்டேல் கருதியதாக அர்த்தமில்லை. பட்டேலின் இந்த மனமாற்றத்துக்குப் பகுதி அளவு காரணம், கட்சியில் நிலவிய அபிப்பிராயத்துக்கு அவர் மதிப்பளித்ததுதான். மறு பாதி காரணம், நேருவின் விருப்பமெல்லாம் சட்டமாக முடியாது என்று நேரு உணர வேண்டும் என்று அவர் கருதியதுதான்! 'நேருவை வெல்ல ஒரு சந்தர்ப்பம் இதோ இருக்கிறது' என்று



''நம்ம எம். எல். ஏ. திடீர்னு இப்படி ஓடி ஓடித் தொகுதியைச் சுற்றிப் பார்க்கிறாரே என்ன விஷயம்?''

''வேறொண்ணுமில்லே...! புறம்போக்கு நிலம் எங்கேயாவது அகப்படாதான்னு தேடறார்...!''

— சரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா



கண்டதும் பட்டேலின் மனம் உறுதிப்பட்டு விட்டது. ஆனாலும், எங்கே, பிரசாத் கடைசி நிமிஷத்தில் பின்வாங்கி விடுவாரோ என்ற பயமும் அவருக்கு இருந்தது! எனவே பிரசாத்துக்கு அவர் ஒரு செய்தி அனுப்பினார்: ''மணமகன் பல்லக்கைத் துறந்துவிட்டு இறங்கி ஓடிவிட மாட்டான் என்றால் கல்யாணம் நடப்பது நிச்சயம்!'' ஆனால் இந்த மாப்பிள்ளையோ ஏற்கெனவே பல்லக்கில் ஏறிச் சப்பணமிட்டு உட்கார்ந்திருந்தார்! ''அவரைச் சேர்ந்தவர்கள் கவலைப்பட்டிருக்கவே அவசியமில்லை'' என்று நினைவு கூர்கிறார் மிச்ரா. பிரசாத், வைரத்தை விடக் கடினமாக இருந்தார். நேருவிடம் அவர், தாம் பின்வாங்குவது என்பது துரோகமாகவும் மறுதரப்பின் யதேச்சாதிகாரமாகவும் கருதப்படும் என்றே சொன்னார்! இப்போது ஸி. ஆர். தான் இறுதி முடிவு எடுக்க வேண்டிய நிலையில் இருந்தார். அவர் உடனடியாகச் சற்றும் தயக்கமின்றித் தாம் ஓய்வு பெறுவதாக அறிவித்து விட்டார்!

கவர்னர் ஜெனரல் என்ற முறையில் ஸி. ஆர். மாபெரும் வெற்றி பெற்றிருந்தார். இதனை ஒப்புக் கொள்ளாதவரே கிடையாது. அவ்வாறிருக்க அவர் ஜனாதிபதியாவதை காங்கிரஸ் கட்சியினர் ஏன் விரும்பவில்லை? அவர் ஹிந்தி மாநிலங்களுக்கு அப்பாலிருந்து வந்தவர்; சரளமாக ஹிந்தி பேசத் தெரியாதவர் என்பன காரணங்களாக இருக்கலாம். ''ஹிந்தி ஆதரவாளர்கள் ராஜன் பாபுவையே விரும்புகின்றனர்'' என்று நேருவே பட்டேலுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் ஒப்புக் கொண்டிருக்கிறார். தவிர, ஸி. ஆர்., தமது கண்டிப்பு — கறார் நடத்தை காரணமாகவே தனிப்பட்ட முறையில் சில விரோதிகளைச் சம்பாதித்துக் கொண்டிருக்கலாம். ''ராஜாஜியைத் திட்டமிட்டு ஒதுக்கி விட முனைபவர்கள்'' பற்றி ஜவாஹர்லால் பேசினார்.

ஆனால் இவையெல்லாவற்றையும் விட முக்கியமான இரு காரணங்கள் உண்டு. அவை, ஸி. ஆரின் 1942 கொள்கையும் நேரு — பட்டேல் உறவு முறையும்தாம். யாருமே எதிர்பாராத விதமாகப் பிரசாத் விட்டுக் கொடுக்காமலும் உறுதியாகவும் இருப்பதைப் பார்த்ததும், நேருவுக்குத் தோல்வி தர ஒரு வாய்ப்பு இருப்பதைப் பட்டேல் கண்டார். அந்த வாய்ப்பை அவர் நழுவவிடவில்லை. எல்லாவற்றையும் விட முக்கியமான காரணம், ஸி. ஆர்., 1942 இல் கட்சியையெதிர்த்துக் கொண்டதற்கு இப்போது பலனை அனுபவித்தார் என்பது தான்! இன்று அரசியல் நிர்ணய சபையில் இருந்தவர்களில் பெரும்பான்மையான காங்கிரஸ்காரர்கள், 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தின் போது சிறை புகுந்து ''பட்டம்'' பெற்றவர்கள். அவர்களோடு பிரசாத்தும் சிறைப்பட்டிருந்தார். ஆனால் ஸி. ஆரோ அன்று பிரிட்டிஷாருடனும் முஸ்லிம் லீகுடனும் சமரசமாகப் போக வேண்டும் என்று பேசிக் கொண்டிருந்தார். 'இந்த இருவரில், யார் இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதி?' என்று கேட்டால், காங்கிரஸ்காரர்களுக்கு உடனே பிரசாத் என்றுதான் கூறத் தோன்றியது. பழைய கதையை மறந்து, ஸி. ஆர். எவ்வளவு உபயோகமாக இருப்பார் என்பதை பட்டேலும் நேருவும் காண முடிந்ததுபோல், மற்ற காங்கிரஸ்காரர்களால் பார்க்க முடியவில்லை. 1942 இன் நினைவுகளுக்கு அவர்கள் கட்டுப்பட்டிருந்தனர்.

'அயல்நாட்டு ராஜதந்திரிகளை வியப்படுத்திய ஸி. ஆரால் அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களை வசப்படுத்தியிருக்க முடியாதா?' — இது சிக்கலான கேள்வி. பதில் கூறுவது சிரமம். ஆனால் ஒன்று. ஸி. ஆர். இதற்குச் சிறிது கூட முயற்சி எடுக்கவில்லை என்ற மட்டில் உறுதியாகக் கூறலாம். கடமை அழைத்த போது அவர் உயர் பதவிகளை வகித்தார்; ஆனால் அப்பதவிகளுக்கு அவர் ஆசைப்படவில்லை. அவர் விரும்பியிருந்தால் பட்டேலிடம் ஒரே ஒரு வார்த்தை கோடி காட்டியிருந்தால் போதும். ஜனாதிபதி பதவி அவர் மடியில் வந்து விழுந்திருக்கும். ஆனால் ஸி. ஆர். இப்படி தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொள்ளத் தயாராக இல்லை. எனவேதான் இந்தப் பிரச்னை குறித்து இறுதி முடிவு எடுக்கப்பட்ட சமயம், பட்டேல் நேருவிடம் சொன்னார்: ''ஜனாதிபதி பதவியில் தாம் நியமிக்கப்பட வேண்டும் என்பதில் ராஜாஜி ஆர்வமாக இருக்கிறார் என்று எனக்குத் தோன்றவில்லை.''

ஸி. ஆர். கொஞ்சமும் வருத்தப்படவில்லை என்றாலும் நேருவுக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. அவரது விருப்பம் நிராகரிக்கப்பட்டிருந்தது. அவரது கௌரவமும் பெருமையும் அடிவாங்கியிருந்தன!

(தொடரும்)

# மாடு வாங்கப் பணமில்லை; கடன் கொடுக்க மனமில்லை!



கோபால்பதி

நல்ல முறையில் லாபம் ஈட்டிக் கொண்டிருந்த ஒரு பால் சொசைட்டி, இன்று மூடிக் கிடக்கிறது. எங்கே? செங்கல்பட்டு மாவட்டம், செய்யூர் வட்டத்தைச் சேர்ந்த சிறுநகர் என்ற கிராமத்தில். மொத்தம் சுமார் 1000 பேர் கொண்ட இக்கிராமத்தைச் சேர்ந்த 135 பேர் ஒன்று சேர்ந்து, கடந்த 83 ஆம் ஆண்டு ஒரு கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் சங்கத்தை நிறுவினார்கள். உறுப்பினர்கள் அத்தனை பேரும் சொந்தமாய்க் கறவை மாடுகள் வைத்துக் கொண்டு, சொசைட்டிக்குப் பாலை விற்றுக் கஷ்டமின்றி வாழ்ந்து கொண்டிருந்தனர். அந்த மாடுகள் பால் கொடுப்பதை நிறுத்தியதும், தொடர்ந்து பால் சப்ளை செய்யப் புதிதாய் மாடுகள் வாங்க விரும்பினார்கள் உறுப்பினர்கள்.

பெரும்பாலான உறுப்பினர்கள் எளிய ஹரிஜனங்கள் என்பதால், மாடுகள் வாங்கப் பணமில்லை. எனவே, வங்கியில் கடன் வாங்கத் தீர்மானித்து, மதுராந்தகத்தில் உள்ள அனைத்து தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளையும் அணுகினார்கள். ஆனால் ஒரு வங்கியும் இவர்களுக்கு லோன் தர முன்வரவில்லை. சூணாம்பேடில் உள்ள இந்தியன் ஓவர்சீஸ் வங்கியை அணுகியபோது, 'மத்திய கூட்டுறவு வங்கியினை அணுகுங்கள்: அவர்கள்தான் உங்களுக்கு லோன் தருவார்கள்' என்று சொல்லவே, அதன்பின் காஞ்சிபுரம் மத்திய கூட்டுறவு வங்கியின் அச்சிறுப்பாக்கம் கிளையை அணுகியும் பயனில்லை!

"நாங்களே பி. டி. ஓ. ஆபீஸிலிருந்து நபருக்கு ரூ. 833 வீதம் 25 பேருக்கு அரசு மானியம் ஏற்பாடு செய்து அந்தத் தொகையையும் மத்திய கூட்டுறவு வங்கிக்கு வாங்கித் தந்தோம். மத்திய வங்கியும், இருபத்தைந்து பேருக்கு லோன் சேங்ஷன் செய்தது. அந்தத் தொகையைக் கிராம விவசாயிகள் சங்கத்துக்கு அளிக்கவும் செய்தது. ஆனால் விவசாயிகள் சங்கத்திலிருந்து எங்கள் பால் சொசைட்டி உறுப்பினர்களுக்குக் கடன் வழங்கப்படவில்லை. இதுவரையில் பல முறை மத்திய கூட்டுறவு வங்கி அலுவலர்களைப் பார்த்துப் பேசியும், கடன் கிடைத்தபாடில்லை. இன்றைக்குப் பால் சொசைட்டி இயங்காததால், அனைவரும் மிகவும் கஷ்டப்படுகிறோம். ஹரிஜனங்களுக்கு அது செய்கிறோம், இது செய்கிறோம் என்று அரசு மார் தட்டுகிறது. ஆனால் எண்பது சதவிகிதம் ஹரிஜனங்களையே உறுப்பினர்களாகக் கொண்ட இந்த சொசைட்டிக்கு லோன் தர மட்டும் எந்த வங்கியும் முன்வரவில்லை.

"இது மட்டுமா? எங்கள் ஊருக்குப் பஸ் வசதி இல்லை; ஆஸ்பத்திரி வசதி இல்லை; எங்கள் ஊர்ப் பிள்ளைகள் ஆரம்பப் பள்ளி முடித்தால் உயர்நிலைப் பள்ளிக்கூடத்துக்கு அச்சிறுப்பாக்கம் (15 கி.மீ) மதுராந்தகம் (24 கி. மீ.) சித்தாமூர் (17 கி.மீ.) தான் போக வேண்டும். டவுன் பஸ் ஓடுகிறது. ஆனால் அது வந்து போகிற நேரம் பிரயோஜனப்படும்படியாய் இல்லை. அதை மாற்றி அமைத்தால் சௌகரியம்..." என்றார்கள் பால் சொசைட்டி தலைவர் கோபால்பதியும், மற்ற உறுப்பினர்களும்.

பசுமைப் புரட்சிக்குப் பிறகு இப்போது வெண்மைப் புரட்சியில் இறங்கியிருப்பதாகக் கூறிக் கொள்ளும் அரசு, 'உண்மையில் மெத்தனப் புரட்சிதான் நடக்கிறது' என்ற பழிச் சொல்லுக்கு ஆளாகாமலிருந்தால் சரி.

— மௌஷ்மி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473369.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.


வேண்டும்போதெல்லாம் சுவைத்திட
மொரு மொரு பிஸ்கட்
போர்ன்விடாவின் குணம் நிறைந்தது !
Bournvita


Cadbury's
Bournvita
Biscuits
Cadbury's
சந்தேகமென்ன ! காட்பரீஸ் தயாரிப்பேதான் !
காட்பரீஸ்
போர்ன்விடா
பிஸ்கட்

